மாலை 48 மணி 8 ஆகஸ்டு 2006 விலை ரூ10



# திருக்கோயில்

இந்து சமய அறநிலைய ஆட்சித் துறை வெளியீடு

விநாயகர் சதுர்த்தி
27.08.2006



முக்குருணி விநாயகர்
மதுரை



உச்சிப் பிள்ளையார்
திருச்சி



ஈச்சநாரி விநாயகர்
கோவை


இறைவன் மகப்பேறு செய்தருளிய காட்சி

# அருள்மிகு தாயுமானசுவாமி திருக்கோயில்

## மலைக்கோட்டை, திருச்சிராப்பள்ளி - 620 0002

## குழந்தைப்பேறு சுகப்பிரசவ பிரார்த்தனை தலம்

தென்கயிலாயம் எனப் போற்றப்படும் இத்திருத்தலத்தில் இறைவன் சுயம்பு மூர்த்தியாக மேற்கு பார்த்த நிலையில் மிகப்பெரிய சிவலிங்க வடிவில் எழுந்தருளியுள்ளார்.

இத்திருத்தலத்தில் அருள்மிகு தட்சிணாமூர்த்தி எட்டு முனிவர்களுக்கு உபதேசம் செய்து தர்பாசனத்தில் அமர்ந்து அருள்பாலிப்பது மற்ற தலங்களுக்கு இல்லாத சிறப்பாகும்.

இரத்தினாவதி என்ற பெண்ணுக்கு இறைவன் தாயாக வந்து சுகப்பிரசவம் செய்து அருள்செய்த தலம் ஆதலால் இங்கு எழுந்தருளியுள்ள இறைவன் தாயுமானசுவாமி என அழைக்கப்படுகிறார். இங்கு வேண்டுவோர்க்கு குழந்தைப்பேறு, சுகப்பிரசவம் நடைபெறுவது கண்கூடான உண்மையாகும். ஆதலால் இங்கு பிரார்த்தனை செய்யும் பெண்களுக்கு சுகப்பிரசவம் ஆன பின்பு பால் அபிஷேகம் மற்றும் வாழைப்பழத்தாரை அர்ப்பணம் செய்வது இன்றுவரை நடைபெற்று வருகிறது.

விநாயகர் சதுர்த்தி விழா இத்திருக்கோயிலில் சிறப்பு அபிஷேக ஆராதனைகளுடன் செய்யப்பட உள்ளது. விநாயகர் சதுர்த்தி நாளன்று 18- படி அரிசியிலான பெரிய கொழுக்கட்டை அருள்மிகு உச்சிவிநாயகர், அருள்மிகு மாணிக்கவிநாயகர் சன்னிதிகளில் நைவேத்யம் செய்யப்படும். கொழுக்கட்டை நைவேத்தியத்திற்கு சேவார்த்திகள் விரும்பும் தொகையை அனுப்பலாம்.

| வ.எண் | கட்டண விபரங்கள் | கட்டணம்ரூ. | நிரந்தர முதலீட்டுத் தொகை ரூ |
|---|---|---|---|
| 1 | அர்ச்சனை செய்து தபாலில் பிரசாரதம் அனுப்புவதற்கு மாதம் ஒரு முறை) | 25/- | 6,000/- |
| 2 | அருள்மிகு உச்சி விநாயகர், அருள்மிகு தாயுமானசுவாமி மற்றும் அருள்மிகு மட்டுவார் குழலம்மை அபிஷேகம் (தலா) | 250/- | 5,000/- |
| 3 | அருள்மிகு மாணிக்க விநாயகர் சந்தனகாப்பு மற்றும் அருள்மிகு உச்சி விநாயகர் சந்தனகாப்பு (தலா) | 600/- 150/- | 12,000/- |
| 4 | வாழைப்பழத்தார் கட்ட (சுகப்பிரசவ பிரார்த்தனை) | 150/- | |
| 5 | கணபதி ஹோமம் மற்றும் மஹாலெட்சுமி ஹோமம் (தலா) | 1500/- | |
| 6 | ருத்ரஜபம் | 1,000/- | |
| 7 | சங்காபிஷேகம் | 5,000/- | |

பிரார்த்தனைக்குதொடர்பு கொள்ளவும் தொகை அனுப்பவும் வேண்டிய முகவரி

உதவி ஆணையர் / செயல் அலுவலர்
அருள்மிகு தாயுமானசுவாமி திருக்கோயில்
திருச்சிராப்பள்ளி - 620 002. போன்: 0431 - 2704621
இணையதளம் : www.thiruchyrockfort.org.
E.mail: trichyrockforttemple@sancharnet.ij

திரு. பொ. ஜெயராமன் பி.எஸ்.சி., பி.எல்.,
உதவி ஆணையர்/ செயல் அலுவலர்

திரு. தி. இராசமாணிக்கம். பி.ஏ., பி.எல்.,
தக்கார்/இணை ஆணையர்



# திருக்கோயில்

திருவள்ளுவர் ஆண்டு 2037 விய- ஆவணி
மாலை 48 மணி 8 ஆகஸ்டு 2006

## அன்பார்ந்த வாசகப் பெருமக்களே!

**வணக்கம்.**

15.08.06 அன்று 60 வது சுதந்திரத் திருநாளில் அடியெடுத்து வைக்கும் நாம், நமது இந்தியத் திருநாட்டின் விடுதலைக்காக பாடுபட்டவர்களுக்கும், தன் இன்னுயிரைத் துச்சமென மாய்த்த தியாகச் சுடர்களுக்கும் நமது நன்றியினை சிரந் தாழ்த்தி காணிக்கையாக்கிடுவோமாக.

மூலப்பொருளும், முழு முதற் கடவுளுமான ''விநாயகப் பெருமானின்'' விநாயகர் சதுர்த்திவிழாவினை முன்னிட்டு ''விநாயகர் சதுர்த்திகள்'' என்ற தலைப்பில் தமிழாகரர் திரு.தெ.முருகசாமி அவர்கள் சிறப்பானதொரு கட்டுரையை வழங்கியுள்ளார்கள்.

இறைவனை எத்தன்மையிலாவது வழிபடுங்கள், அத்தன்மையில் இறைவன் அருள்புரிவான் எனும் ''திருமூலரின்'' திருமந்திரக் கருத்தினை - இராமன் திருவடிகளை வணங்கி வந்த பரதனுக்கு, இறைவன் அனுமன் எனும் திருவடி மூலம் காட்சியருளினார் என இராமகாவியத்தின் மூலம் மிகச்சிறப்பாக எடுத்தாண்டு தனது ஆழ்ந்த சிந்தனையைக் கருத்தோவியமாக்கி ''பூட்டும் சாவியும்'' என்ற தலைப்பில் திரு.சொ.சொ.மீ.சுந்தரம் அவர்கள் வழங்கியுள்ள கருத்தோவியம் படித்து இன்புறத்தக்கது.

''அலங்கார நாயகன்'' முருகன் என்ற தலைப்பில் டாக்டர் திருமதி சரசுவதி இராமநாதன் அவர்களும், நம்மாழ்வாரின் சிறப்புகளை '' வேதம் தமிழ் செய்த மாறன்'' எனும் தலைப்பில் திரு.பொ.ராமநாத பிள்ளை அவர்களும், '' சேக்கிழார் பெருமான்'' பெண்மையை எவ்வாறு போற்றியுள்ளார் என்பதை தமிழாசிரியர் திரு.தி.இராசகோபாலன் அவர்களும், ''செவிச் செல்வத்தின்'' சிறப்பினை டாக்டர் திரு அரங்க இராமலிங்கம் அவர்களும், அகத்தியச் சித்தரின் சிறப்புகளை முனைவர் திரு.இரா.செல்வக்கணபதி அவர்களும் வழங்கியுள்ள கட்டுரைகள் படித்து இன்புறத்தக்கன.

தொல்லியல் துறையைச் சார்ந்த திரு.ச.குழந்தைவேலன் அவர்கள் வழங்கியுள்ள ''வளசரவாக்கத்தின்'' வரலாற்றுச் சுவடுகள், இம்மாத காலப்பெட்டகமாக வெளிவந்துள்ளது.

''குறைதீர்க்கும் கோவிந்தன்'' குணசீலம் அருள்மிகு பிரசன்னவேங்கடாசலபதியின் மகாத்மியமும், பெருமைக்குரிய பெரிய கோயில், கச்சி திருவேகம்பத்தின் பெருமைகளும், அட்ட வீரட்ட தலங்களில் ஒன்றான திருக்கோவலூர் தலச் சிறப்பும் இம்மாத திருத்தல உலாவாக வெளிவந்துள்ளன.

அனைவரும் திருக்கோயில் இதழைப் படித்து மகிழ்ந்திட அன்புடன் வேண்டுகிறேன்.

அன்புள்ள

(த. பிச்சாண்டி, இ.ஆ.ப.)
ஆணையாளர்

இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை,
119, உத்தமர் காந்தி சாலை,
சென்னை - 600 034.





சென்னை, புரசைவாக்கம் அருள்மிகு ஸ்ரீனிவாசப் பெருமாள் திருக்கோயிலில் 02.07.2006அன்று நடைபெற்ற குடமுழுக்கு விழாவில் மாண்புமிகு அறநிலையத் துறை அமைச்சர் திரு. கே ஆர். பெரியகருப்பன் அவர்கள், அறநிலையத்துறை ஆணையர் திரு.த.பிச்சாண்டி., இ.ஆ.ப அவர்கள் மற்றும் பக்தபெருமக்கள்.

சிவகங்கை மாவட்டம், கண்டதேவி, அருள்மிகு சொர்ணமூர்த்தீஸ்வரர் என்கிற சிறகிளிநாதர் திருக்கோயிலில் 9.7.2006 அன்று நடைபெற்ற திருத்தேரோட்ட விழாவில் மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சர் திரு. கேஆர். பெரியகருப்பன்அவர்கள்.



சாதிப்பாகுபாடின்றி அர்ச்சகரை நியமிப்பது தொடர்பாக அமைக்கப்பட்ட உயர்நிலைக் குழுக் கூட்டத்தில் தலைவர், ஓய்வுபெற்ற உயர்நீதிமன்ற நீதிபதி, நீதியரசர் திரு. ஏ.கே.ராசன் அவர்கள், உறுப்பினர்/செயலாளர் திரு.த.பிச்சாண்டி, இ.ஆ.ப., அவர்கள், உறுப்பினர்கள் தவத்திரு. தெய்வசிகாமணி பொன்னம்பல தேசிக அடிகளார் அவர்கள், திருக்கயிலாய பரம்பரை மெய்கண்ட சந்தானம் கயிலை குருமணி சீர்வளர்சீர் சாந்தலிங்க ராமசாமி அடிகளார் அவர்கள், ஸ்ரீரங்க நாராயண ஜீயர் சுவாமிகள், சிவநெறிச் செம்மல் முனைவர் பிச்சை சிவாச்சாரியார் அவர்கள், சிவகாம சிரோமணி திரு. கே. சந்திரசேகர பட்டர் அவர்கள் ஆகியோர்.

## இதழின் உள்ளே ....





ஸ்ரீரங்கம் அருள்மிகு அரங்கநாத பெருமாள் முகமதியர்கள் படையெடுப்பின் போது கடந்த 1320ஆம் ஆண்டு முதல் 1360 ஆண்டு முடிய சுமார் 40 ஆண்டு காலம் திருமலை திருப்பதி கோயிலில் பாதுகாப்பாக காப்பற்றப்பட்டு வந்ததை நினைவு கூறும் வகையில் கைசிக ஏகாதசி நாள் அன்று திருமலை திருக்கோயிலிலிருந்து வஸ்திர மரியாதைகள் அனுப்புவதாக முடிவெடுக்கப்பெற்று முதல் ஆண்டாக கடந்த 11.12.2005 அன்று மரியாதைகள் கொண்டு வந்து

ஸ்ரீரங்கம் அருள்மிகு அரங்கநாதசுவாமி திருக்கோயில் வளாகத்தில் உள்ள ஸ்ரீரங்க விலாசமண்டபத்தில் 16.07.2006 அன்று காலை 07.00 மணிக்கு திருப்பதிக்கு எடுத்துச் செல்லும் வஸ்திர வகைகளை காலை 08.00 மணிக்கு இத்திருக்கோயிலிலிருந்து எடுத்துச் சென்றனர். மேற்படி வஸ்திர மரியாதை 16.07.2006 மாலை திருமலை சென்றடைந்தது.

# திருமலையப்பனுக்கு திருவரங்கனின் மரியாதை





அளிக்கப்பட்டது.

இதனைத் தொடர்ந்து, ஸ்ரீரங்கம் திருக்கோயிலிலிருந்து திருமலை திருப்பதி திருக்கோயிலுக்கு ஆண்டுதோறும் வஸ்திர மரியாதைகள் அனுப்பலாம் என தீர்மானித்ததன் அடிப்படையில் இதுகுறித்து திருமலை திருப்பதி நிர்வாகத்தினரிடம் ஒப்புதல் கோரியதில் ''ஆனிவார ஆஸ்தானம்'' எனப்படும் 17.07.2006 அன்று வஸ்திர மரியாதைகளை கொண்டு வந்து கொடுக்க இசைவு தெரிவித்தனர்.



சிறப்பு ஆணையர் மற்றும் தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும் அறநிலையத்துறை அரசுச் செயலர் திரு. ஆர்.கற்பூர சுந்தரபாண்டியன் இ.ஆ.ப., அவர்களால் 17.07.2006 காலை 08.00 மணிக்கு திருமலை திருப்பதி தேவஸ்தான நிர்வாக அதிகாரி திரு. நாராயண சர்மா இ.ஆ.ப., அவர்களிடம் வழங்கினார். இந்நிகழ்ச்சியில் இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை திருச்சிராப்பள்ளி மண்டல இணைஆணையர் திரு.தி.ராஜமாணிக்கம், திருத்தணி அருள்மிகு சுப்ரமணியசுவாமி திருக்கோயில் இணை ஆணையர் திரு.ப.ராஜா, உபயதாரர்கள், பணியாளர்கள் ஆகியோர் கலந்து கொண்டனர். இதற்கான ஏற்பாடுகளை இத்திருக்கோயில் இணை ஆணையர் - செயல் அலுவலர் திரு.ப.சிவகுமார் செய்தார்.

இனி ஆண்டுதோறும் திருப்பதியிலிருந்து ஸ்ரீரங்கம் திருக்கோயிலுக்கு கைசிக ஏகாதசி தினத்தன்றும், ஸ்ரீரங்கம் திருக்கோயிலிலிருந்து திருப்பதி கோயிலுக்கு ஆனிவார ஆஸ்தான தினத்தன்றும் வஸ்திர மரியாதைகள் வழங்கப்பட உள்ளது.

# விநாயக சதுர்த்திகள்

தமிழாகரர் தெ. முருகசாமி
(முன்னாள் முதல்வர், இராமசாமி தமிழ்க்கல்லூரி, காரைக்குடி
புதுச்சேரி - 9

**விநாயகரின் முதன்மை**

நமது நாட்டில் உள்ள சிவாலயங்கள் தோறும் நடைபெறும் பூசைமுறைகளின் தொடக்கமாக விநாயகரை வழிபடுவது ஒரு மரபாக இருந்து வருகிறது. வீடுகளிலும் திருமணவிழா, புதுமனைபுகுவிழா போன்ற மங்கல விசேடங்களை நடத்தும்போதும் தொடக்கத்தில் விநாயகரை வணங்கித்தான் தொடங்குகிறோம். தமிழ்நாட்டின் மிகப் பழைய சங்க இலக்கியங்களிலோ தொல்காப்பியத்திலோ காணப்படாத விநாயகக் கடவுள் பற்றிய தெளிவான குறிப்பைச் சைவத் திருமுறைகள் தோன்றிய காலத்திலிருந்துதான் அறிய முடிகிறது. வேதநெறியும், சைவத் துறையுமாகிய வடமொழி மரபும், தமிழ்மொழி மரபும் இணைந்த ஒரு கலவையான வழிபாட்டுமுறை தமிழகத்தில் தோன்றிய காலந்தொடங்கி விநாயரை வழிபடுகிற வழக்கம் வளர்ச்சி பெற்றிருக்க வேண்டும் என்பது பெரும்பாலான ஆராய்ச்சியாளர்களின் கருத்து.

இந்த ஆராய்ச்சி ஒருபுறமிருக்க விநாயகரின் வழிபாடும் பூசனையும் எளிமைக்கு எளிமையாக அமைந்துவிட்டதால், மற்ற கடவுளர்க்கு இல்லாத சிறப்பும் தலைமையும் வளர்ந்து விட்டதோடு எங்கும் நீக்கமற நிறைந்து காணும் முதலிடத்தையும் பெற்றுவிட்ட தெய்வமாக விளங்குகிறார் என்பது ஆன்ம சிந்தனைக்குரிய இனிப்பான செய்தியாகும்.

**விநாயகரின் எளிமை**

பிடித்து வைத்தால் பிள்ளையார் என்பது ஒரு நாட்டுப்புறப் பழமொழி. ஒருபிடி சாணத்தை உருட்டி மஞ்சள் குங்குமம் இட்டு அறுகம்புல்லை அதன் தலையில் வைத்துவிட்டால் வழிபாட்டிற்குரிய பிள்ளையார் நம் கண்முன் தோன்றிடுவார். அதுபோலவே மஞ்சள் பொடியை எடுத்து சிறிது தண்ணீரில் ஈரமாக்கி மூன்று விரல்களால் பிடித்து வைத்தாலும் விநாயகர் அங்கே வந்து விடுவார். மேலும் களிமண்ணால் அவர் வடிவத்தைப் படைத்து வைத்து வணங்கும் வழிபாட்டு எளிமையும் உடைய ஒரே கடவுளாக உள்ளவர் விநாயகர் ஒருவரே ஆவார்.

கடவுள் ஒரு புல்லிலும் உள்ளான் (God is a Blade of grass) என்பது ஓர் ஆங்கில ஞானியின் கடவுள் தத்துவமாகும். இந்த அடிப்படையில் அமைந்த எளிமைதான் விநாயகர் வழிபாடு விரைந்து எங்கும் பரவக் காரணமாயிற்று. இத்தகைய எளிய கடவுளுக்கு விநாயகர், பிள்ளையார், கணபதி, ஐங்கரன், ஆனைமுகன், விக்கினேசுவரன் போன்ற பல பெயர்கள் உள்ளன. ஒவ்வொரு பெயரும் ஒவ்வொரு காரணம் பற்றிய பெருமையை உணர்த்தும் பெயர்களாக உள்ளன.

**விநாயகரின் பெயர்கள்**

வி + நாயகன்; விநாயகன். இதற்கு, மேலான தலைவன் என்பது பொருள். மேலான ஞானத்தை (அறிவை) விஞ்ஞானம் என்பது போல மேலான தெய்வம் விநாயகர் ஆவார். தனக்கு மேல் ஒரு தலைவன் இல்லாத, தானே தலைவனாம் தன்மையன் என்பது இதன் நுட்பப்பொருளாகும்.

வி - என்றால் கல்வி என்ற பொருளும் உண்டு. தன்னை வணங்குவார்க்குக் கல்வியைத் தருபவர் என்றும் உரைப்பர். வி- என்பதற்குத் திசைஎன்ற மற்றொரு பொருளும் உண்டு. அதற்கேற்ப அவர் ஒருவரே எல்லாத் திசைகளுக்கும் தலைவர் என்ற பொருள் பொருத்தமான வகையில் எங்கும் காணப்படும் கடவுளாகக் காட்சியளிக்கிறார்.

தேவகணங்களுக்கெல்லாம் தலைவர் என்பதால் கணபதி என்றும் விரிந்து பரந்து உலகில் கடவுள் எங்கும் உள்ளார் என்பதைப் பளிச்சென உணர்த்தவே கண்ணுக்குப் புலப்படும் பேருருவமான யானையின் வடிவம் தரப்பட்டதால் ஆனைமுகன் என்றும் விநாயகருக்குப் பெயர்கள் அமைந்தன. ஐந்து கைகளை உடையதால் ஐங்கரன் எனப்பட்டார். தம்மை வழிபாடு செய்வார்க்கு நேரும் இடையூறுகளை நீக்குவதால் விக்கினேசுவரன் என்ற பேர் பெற்றார். இவ்வாறு பல பெயர்களால் பெருமை பெற்ற விநாயகரின் உருவத்தோற்றம் கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தாக உள்ள இனிய தெய்வமாகவும் உள்ளார்.

**விநாயகரின் வடிவம் :**

விலங்கு உடலும் மனித உடலும் சேர்ந்த இரட்டை வடிவத் தோற்றம் உடையவராக விநாயகர் காணப்படுகிறார். திருமால் நரசிங்கமாகத் தோற்றமளித்தது போல விநாயகரும் நரவிலங்காகக் காட்சி தருகிறார். அஃறிணையும் உயர்திணையும் இணைந்ததே இவ்வுலகம் என்பதைக் கடவுள் தாமாக இருந்து காட்டும் விதமாக அவ்விரு வேறு உருவத்திருமேனி விநாயகருக்குப் படைக்கப் பட்டது.

யானையின் நான்கு கால்களும் விநாயகருக்கு நான்கு கைகள். எந்த விலங்கிற்கும் இல்லாத துதிக்கை ஐந்தாவது கை, இக்கைகள் ஐந்தும் படைத்தல், காத்தல், மறைத்தல், அழித்தல்,

அருளல் என்ற ஐந்தொழிற்கான அடையாளங்கள்.

ஒரு கையிலுள்ள பாசக்கயிறு பிறவிக்குக் காரணமாகிய பாசத்தைச் சுட்டி உணர்த்தும் படைப்புத் தொழிலைக் குறிக்கிறது.

மற்றொரு கையின் அங்குசமானது உலக சங்காரத்தை உணர்த்துகிறது.

கீழ்நோக்கிய அபயவரதமாகிய இன்னொரு கை தனது தாளை அடைந்தார்க்கு அஞ்சேல் என அபயம் அளித்து திருவடி இன்பத்தை அருளும் குறிப்பைக் காட்டுகிறது.

மோதகமுடைய மற்றொருகை இன்ப அருளைச் சட்டென்று வெளிப்படையாகக் காட்டாமல் சற்று மறைத்துக் காட்டியருளும் திரோதானத்தைச் சுட்டுகிறது.

ஐந்தாவதாகிய தும்பிக்கை மூக்காக அமைந்துள்ளதால் மூச்சுக்காற்றை உள்வாங்கி வெளிவிடும் உயிர்ப்பால் மனித உடலில் உயிர் தங்கும் காலம்வரை ஆன்மாவைக் காத்தருளும் குறிப்பைத் தருகிறது. இப்படியாக ஒவ்வொரு உறுப்புகளுக்கும் தத்துவ விளக்கம் கூறப்படு கின்றன.

விநாயகப் பெருமானுக்குரிய கொம்புகள் இரண்டு. ஒன்று ஒடிந்தும் மற்றது மழுமையாகவும் காணப்படும். ஒடிந்த கொம்பு உலக ஆசாபாசஉணர்வுகளில் திளைக்கும் ஆன்மாவின் பாசஞானத்தையும் முழுக்கொம்பு ஆன்மாவைப் பக்குவப்படுத்தி அருளவல்ல அப்பழுக்கற்ற பரிபூரணமாகிய இறைவனை உணர்த்தும் பதிஞானத்தையும் சுட்டுவதாக உள்ளன.

எந்த விலங்கிடத்தும் காணமுடியாத உடலின் மேல்தோல் சுருக்கங்கள் யானைக்கு மட்டுமே உண்டு. யானைக்குள்ள தோற்சுருக்கம் மனித உடலிலும் காணலாம். நரை திரை மூப்பு என்ற வாழ்விற்குட்பட்டது மனித வாழ்வு என்பதைச் சுட்டும் அடையாளமே இதுவாகும்.



விநாயகரின் உடல் உறுப்புகளில் எல்லோரையும் வியக்கச் செய்வது அவரது பெருவயிறு. எல்லாவற்றையும் தன்னுள் அடக்கிக் காட்டும் பரம்பொருள் தத்துவத்தை உணர்த்தும் குறிப்பை அப்பெருவயிறு காட்டும்.

மேலும் அப்பெருமானுக்குரிய தாமரை இலை போன்ற அகன்ற பெரிய இரு செவிகளிலும் பக்தர்களிடம் பிறவிப்பிணியாகிய அனல்காற்று வந்து தாக்காத படியாகக் காத்து அருட்காற்றை வீசும்படியான விசிறிகளாய் உள்ளன.

எத்தகைய உருவத்திற்கு இத்தனை சிறிய கண்கள் என வியக்குமாறுள்ள மிகச் சிறிய கண்கள் இரண்டும் எதையும் நோக்கரிய நோக்கால் பார்க்க வேண்டும் என்ற ஞானக்குறிப்பை உணர்த்தும் அடையாளமாகக் காணப்படுகின்றன.

**விநாயகர்வாகனம் :**

இத்தகைய பேருருவான விநாயகர், நொய்ம்மையான எளிய பிறவியாகிய எலிமீது அமர்ந்திருப்பதான காட்சி வியப்பினும் வியப்பாக உள்ளது. இவ்வளவு பெரிய உருவம் இவ்வளவு சிறிய உருவத்தின் மேல் எப்படி அமர்ந்து நகர்கிறது எனச் சிந்திக்கவும் வியப்பாக உள்ளது. செய்திப் பரிமாற்றத்திற்கு உதவியாக உள்ள தொலைபேசியின் கம்பி சிறிதாயினும் அது தாங்கிச் செல்லும் செய்தியின் வலிமையால் நலிவடைவதில்லை. நாம் காணும் பருப்பொருளை விட எண்ணத்திற்கும் கருத்திற்கும் அதிக ஆற்றல் உண்டு. எனவே ஞான சொரூபமாகிய ஆண்டவனை (விநாயகரை) எளிய ஆன்மா (எலி) சுமக்க வேண்டுவது இயல்பு என்ற தத்துவத்தின் வெளிப்பாடே விநாயகப் பெருமானை எலி சுமப்பதான திருவருட்காட்சியாகும்.

**ஆவணி சதுர்த்தி :**

இவ்வாறாகப் பல்வேறு தெய்வத் திருநாமங்களாலும் ஞானத்தோற்றத்தாலும் கண்ணிலும் கருத்திலும் கொள்ளத்தகும் விநாயகப் பெருமான்தான் மூல முழுமுதற்கடவுள் என்பதால் அவரை வணங்கி வழிபட்டுப் பலனை அடைந்தோர் பலராவர். அகத்தியர், காசிபர், இராவணன் போன்ற புராண மாந்தர்கள் வழிபட்டுப் பேறு பெற்றதாக விநாயகர் புராணம் கூறுகிறது.

விநாயகரது வழிபாட்டில் ஆவணிமாத சதுர்த்தி விரத வழிபாடு மிக உயர்ந்தது. ஆவணி அமாவாசைக்கு அடுத்த நான்காம்நாள் தொடங்கி மறுதிங்கள் சுக்கிலபட்ச சதுர்த்தி வரை முப்பது நாள் விரதம் இருக்க வேண்டும். நாள்தோறும் உடல் தூய்மையுடனும் ஆனைமுகக் கடவுளை மண்ணாலான உருவம் செய்து தோத்திர வழிபாடு மந்திர உச்சாடணத்தால் உருவேற்றி மலரிட்டு தீப தூபத்துடன் வழிபட வேண்டும்.

நிவேதனமாக வைக்கப்பட்ட பால், பழம் முதலியவற்றை வழிபாட்டிற்குப் பின் உண்டு மகிழ்வதோடு மண் உருவை ஒவ்வொரு நாளும் கரைத்து விட வேண்டும். பூசனை முடிவில் அவரவர்க்கேற்ற தானங்களைச் செய்ய வேண்டும் என விநாயகர் புராணம் கூறுகிறது.

விரதம் கொள்வதற்கு ஆவணித்திங்களே சிறந்தது. கார்காலம் தொடங்கும் முதற்பருவம் என்பதால் வணக்கத்தையும் வழிபாட்டையும் முதலில் கொள்ளும் விநாயகருக்கு ஆவணி உகந்த மாதமாகும். புராணத்தில் கூறியவாறு பருவதராஜன் தன் மகள் பார்வதிதேவிக்கு இச்சதுர்த்தி விரதச் சிறப்பைக் கூறும்போது ஆவணிமாதச் சதுர்த்திச் சிறப்பு கூறப்படுகிறது. மகாபாரதக் கிளைக் கதையில் வரும் நிடதநாட்டு அரசன் நளனது வரலாற்றில் நளன் விநாயகரின் சதுர்த்திவிரதத்தால் இகபர நலம் எய்தினான் எனக் கூறப்படுகிறது. ஆவணி மாதச் சதுர்த்தி விரதம் சிறப்படைந்ததால் எல்லா மாதச் சதுர்த்தியும் சிறப்பு வழிபாட்டுக் குரியதாக ஆனது.

*சங்கடஹரசதுர்த்தி :*

சுக்கில பட்சவளர்பிறை சதுர்த்தியைப் போல அமரபட்சத் தேய்பிறை சதுர்த்தியும் வழிபாட்டுக்குரிய சிறப்பிடத்தைப் பெற்றுவிட்டது. இத்தேய்பிறை சதுர்த்தியைச் சங்கடஹர சதுர்த்தி எனப் போற்றி வழிபடுபவர். சங்கடஹர சதுர்த்தி என்றால் சங்கடங்களை அழிக்கும் சதுர்த்தி என்பது பொருள் இச்சங்கடஹரசதுர்த்திக்கு ஒரு வரலாறு உண்டு.

கயிலைக்குச் சிவபெருமானைக் கண்டு வழிபட வந்த நாரதர் சிவனிடம் தான் கொண்டு வந்த மாங்கனி ஒன்றைத் தர, அதனால் சிவன் தம் பிள்ளை இருவரில் யாருக்குத் தருவது என நாரதரிடமே கேட்டபோது நாரதர் இளையவராகிய முருகனுக்குத் தரும்படி கூறினார். நாரதர் உரை கேட்டுச் சினந்த விநாயகருக்குக் கோபம் மூண்டது. இதை ஆகாயத்திலிருந்து பார்த்த சந்திரன் நகைத்து ஏளனம் செய்தான். உடனே சந்திரனது ஒளி மங்கித்தேயக் கடவதாகுக என்றும் தேய்ந்த உருவத்தைப் பார்த்தவர்களும் துன்பமடைவர் என்றும் சாபம் வழங்கியதால் சந்திரன் ஒளியிழந்து போகவும் தேவர்கள் அனைவரும் சந்திரனது அமுதஒளி இல்லாமல் துன்புற்றனர்.

விநாயகரது சாபத்தை மாற்ற வேண்டித் தேவர்கள் அவரிடம் சென்று சிறியோர் செய்த சிறு பிழையைப் பொறுத்தருள வேண்டியவாறு விநாயகரும் சந்திரனுக்கு வாழ்வளித்தார். ஆனாலும் ஆவணித் திங்களின் சுக்கிலபட்சத்தில் வருகின்ற நான்காவது நாளில் மட்டும் சந்திரனை எவரும் பார்க்காதிருக்கக் கடவர் என்றும் எவரேனும் மறந்தும் பார்த்தால் துன்புறுவர் என்றும் திருவாய் மலர்ந்தருளினார். சந்திரனும்



தன் தவற்றை எண்ணி மன்னிப்பு வேண்டியதோடு அதை மாற்றியருளக் கேட்டுக் கொண்டபடி விநாயகர் சந்திரனிடம் அமர பட்சஅங்காரக சதுர்த்திதோறும் நீ வானில் தோன்றுகிற நேரத்தில் உன்னை என்னோடு சேர்த்து வணங்கும்படியாக உனது கலைகளுள் ஒன்றை என் முடியில் வைத்துக் கொள்வேன் எனக் கூறியருளினார்.

விநாயகர் கூறிய, அங்காரக சதுர்த்தி தான் சங்கடஹர சதுர்த்தி. பரத்துவாசமுனிவருடைய மகன் அங்காரகன் தந்தையிடத்தில் ஆயகலைகள் கற்றுத் தேர்ந்து விநாயக மந்திரச் சிறப்பை அறிந்து அம்மந்திரத்தின் வழி விநாயகரது அருளைப் பெற விரும்பினான். அவனது தவத்திற்கு இரங்கிய விநாயகர் அவன் கேட்ட வரங்களைத் தந்தார். ஆகாயத்தில் உள்ள கோள்களுள் ஒன்றாகத் தான் ஆக வேண்டும். விநாயகர் காட்சி தந்த சதுர்த்தியானது அங்காரகன் என்ற பெயருக்கேற்ப செவ்வாய்க்கிழமைகளில் வரும் போது துதிப்பவர்களின் சங்கடங்கள் தீர்க்கப்பட வேண்டும். இப்படி சந்திரன் கேட்டவாறு விநாயகர் அருளியதால் மற்றைய சதுர்த்திகளை விட அங்காரனது நாளாகிய செவ்வாய்க்கிழமைகளில் வரும் சதுர்த்தியானது விநாயகருக்குப் பேருவுகையைத் தந்தது. அந்த சதுர்த்தி பக்தர்களின் தீராத சங்கடங்களை

எல்லாம் தீர்க்கும் நாளாதலால் அது அங்காரசங்கடஹர சதுர்த்தி என்ற பேர் பெற்றது. இச்சங்கடஹர சதுர்த்தி மாசி மாத அமரபட்சத்தில் செவ்வாய்க்கிழமை கூடியதாக இருந்ததால் அந்த நாளில் வணங்குவது மிகவும் சிறப்பானது என்பது விநாயகபுராணம் கூறும் சங்கடஹர சதுர்த்தி விரதபலாபலனாகும். இப்படி அரிதாக வரப்பெறும் அங்காரசங்கடஹர சதுர்த்திக்காகக் காத்திருக்காமல் ஒவ்வொரு மாத அமரபட்சசதுர்த்தியிலும் விநாயகரை வணங்குவது என்ற வழக்கம் உருவானது.

**வழிபாட்டு வழக்கமும் உலக இயக்கமும் :**

இவ்வழிபாட்டு வழக்கத்தை உலக இயக்கத்தோடு ஒத்திட்டுப் பார்த்தால் ஓர் உண்மை விளங்கும். உலக இயக்கத்தில் ஏற்படும் பருவகால அமைப்பில் ஆறுமாதத்திற்கு ஒருமுறை ஒரு மாறுதல் உருவாகிறது என்பது ஆன்றோர் கணிப்பு. ஆடிப்பட்டம் தேடிவிதை, என்றவர்கள் தைப்பிறந்தால் வழி பிறக்கும் என்றனர். ஆடிக்குத் தை ஆறாவது மாதம். இதனையே உத்தராயணம் தட்சணாயணம் என்றும் உலகோர் கூறுவர்.

நடராசரின் நடனக் காட்சியில் ஆனியில் திருமஞ்சனம் என்றால் மார்கழியில் திருவாதிரை. சித்திரைப் பௌர்ணமியின் சிறப்பைப் போல ஐப்பசிப் பௌர்ணமியில் சிவாலயங்களில் அன்னாபிடேகச் சிறப்பு. வைகாசி விசாகத்தைப் போலக் கார்த்திகையில் தீபத் திருவிழா. திருமாலுக்கு உகந்ததாகக் கொண்டாடப் பெறும் புரட்டாசி சனியைப் போலப் பங்குனியின் செவ்வாயில் முருகனுக்கு விரதமிருப்பர்.

மேற்படி ஆறாறு மாத ஒப்புமை போலவே ஆவணிமாத சுக்கிலபட்சத்தில் விநாயகர்சதுர்த்தி என்றால் அதன் ஆறாவது மாதமாகிய மாசியில் அங்காரசங்கடஹரசதுர்த்தி உருவாக்கப்பட்டது.

இப்படி உலகியல் பருவகால மாற்றத்தை உணர்ந்தாலும் அவைகள் வாழ்வியலுக்குரிய ஓர் உன்னதத்தைத் தத்துவமாக உணர்த்துவது போல் உள்ளது. அதாவது எந்த ஒன்றும் ஒன்றாகவே இருப்பதில்லை. அதற்கு இணையாகவோ அல்லது மாறாகவோ வேறொன்று இருப்பதுதான் உலகியல்பு என்ற உண்மையை உணர்த்துவதாக இந்த ஆறு மாதத்திற்கொரு முறையான மாற்றம் உணரவைக்கிறது.

குறிப்பாக இந்த விநாயகர் சதுர்த்தியைப் பொறுத்தமட்டில் நாலாம்பிறைச் சந்திரனைப் பார்க்கக்கூடாதென்ற கருத்துக்கு மாற்று கற்பிப்பது போல் அரிதாக வரும் மாசி மாத சங்கடஹர சதுர்த்தியில் சந்திரனைப் பார்க்கலாம் என்ற விதி விலக்கு வழங்கப்பட்ட நிலை தெரிகிறது. எப்படியோ, மனதில்படியும் விகார அழுக்குகளைத் துடைத்துக் கொள்ள இவ்வழிபாட்டு முறைகள் உதவுகின்றன எனலாம்.

**கும்பிடுதலும் குட்டிக் கொள்ளுதலும் :**

விநாயகரது வழிபாட்டில் அவரைக் கும்பிடுவோர் தலையில் குட்டிக் கொண்டு கும்பிடுவது வழக்கம். தலையை இடமாகக் கொண்ட மூளையின் இயக்கமாக உள்ளது அறிவு. அதைத் தட்டி எழுப்பும் அடையாளமாகக் குட்டிக் கொள்வதென்பது சாதாரண வாழ்வியல் உண்மையாகும். புராணத்தின்படி இதற்கோர் உட்பொருள் உண்டு.

கயிலைக்குச் சென்ற இராவணன் இலங்கையில் சிவலிங்கம் ஒன்றை நிறுவ எடுத்து வந்தபோது, அதை அறிந்த இந்திரன் இதைத் தடுத்து நிறுத்த விநாயகரை வேண்டிக் கொண்டான். அவரும் இராவணனை எதிர்த்துப் போராடியபோது விநாயகர் என அறியாத இராவணன் அவரது தலையில் குட்டினான். பின்னர் தம்மை விநாயகர் எனக் காட்டியதும் இராவணன் கண்டு வணங்கி மன்னிப்பு வேண்டியதோடு தண்டனையும் கேட்டான். முன்பு என் தலையில் குட்டியவாறு நீயே உன் தலையில் குட்டிக்கொள் என விநாயகர் கூறி மன்னித்தருளினார். இதனால் தன் குற்றத்தை உணர்ந்து தானே தன் தலையில் இரத்தம் சொட்டச் சொட்டக் குட்டிக் கொண்டான். தவறு செய்தவர் எவரேயாயினும் விநாயகர் சந்நிதி முன் நின்று தவறுகளுக்காக வருந்தி தமக்குத்தாமே தண்டனையாகக் குட்டிக் கொண்டால் தவறுகள் மன்னிக்கப்படவேண்டும் என இராவணன் வேண்டிக் கொள்ள விநாயகரும் அவ்வாறே ஆகும்படி அருளியதாக அவரது புராணம் கூறும் கதையின் உட்கருத்து நலம்பயக்கும் வாழ்வியல் கருத்தேயாகும்.

இப்படியாக மூல முழுமுதற்கடவுளாகிய விநாயகப் பெருமானை எந்நாளும் வணங்கி வழிபடுவோர் எல்லா நன்மைகளையும் அடைவர் எனலாம்.

# பிரணவ கணபதி

எல்லாம் வல்ல பரம்பொருளாகிய கடவுளிடமிருந்து முதலாவது உண்டாகிய படைப்பு 'ஓம்' எனும் பிரணவநாதமேயாகும். அந்த ஓம் எனும் ஒலியின் வரிவடிவமே விநாயகரின் திருவுருவமாம். இறைவனிடமிருந்து முதற்கண் தோன்றியது ஓங்காரப் பிரணவமே. ஆகையால் இவர் ''பிரணவ கணபதி'' என்றும் ''ஓங்காரரூபன்'' என்றும் அழைக்கப்படுகிறார்.

# பூட்டும் சாவியும்

சொ.சொ.மீ. சுந்தரம், M.Com., M.Phil.,
மதுரை

இராமாயணத்தில் ஒரு காட்சி. இலங்கைப் போர் முடிந்தது. இராமனும் இலக்குவனும் சீதையும் அனுமனும் சுக்கிரீவனும் விபீடணனும் எழுபது வெள்ளம் சேனையும் இலங்கையிலிருந்து அயோத்தியை நோக்கி மிக வேகமாக வந்து கொண்டிருக்கும் சமயத்தில் பரத்வாஜ முனிவர் இராமனை வணங்கி விருந்துண்ண அழைக்கிறார். பரத்வாஜ ஆசிரமம் அலகாபாத்தில் இருக்கிறது. இன்னும் சற்று நேரத்தில் புட்பக விமானம் அயோத்தியை அடைந்து விடும். பதினாலாண்டுகள் மிகச் சரியாக முடிவதற்கு இன்னும் கொஞ்சநேரம் தான் இருக்கிறது. பதினாலாண்டு தாண்டி விட்டால் பரதன் நிச்சயமாக உயிர் வாழ மாட்டான். நெருப்பில் பாய்ந்து விடுவான். அதற்குள் இராமன் அயோத்தியை அடைய வேண்டும். இவ்வளவு அவசரமான நேரத்தில் பரத்வாஜ முனிவர் இராமனை விருந்துண்ண அழைக்கிறார். விருந்துக்குப் போகலாமா வேண்டாமா என்று இராமபிரான் சிந்திக்க வேண்டாமா? பக்தர்களுக்காகவே அவதாரம் எடுத்த அந்தப் பரமன் பரத்வாஜர் என்ற பக்தரின் அழைப்பை மறுப்பானா? பரத்வாஜர் விருந்துக்குப் போய் விட்டான். ஏன் இப்படிச் செய்கிறான்? பரதனை மறந்தானா? மறக்க முடியுமா? தன்னை நினைக்காத மக்களைக் கூடத் தான் நினைக்கும் பரமன், தன்னையே நினைக்கும் தவப்பெருஞ் செல்வனான தம்பியை மறப்பானா? மறக்கவில்லை. அதனால்தான் பரத்வாஜர் விருந்துக்குப் போனான். என்ன புரிய வில்லையா? விருந்துண்ண அமர்ந்த இராமன் என்ன செய்தான் என்று சிந்தியுங்கள். புரியும். பரம்பொருளின் திருவிளையாடலைப் புரிந்து கொள்ளப் பக்தர்களுக்கும் அவன் பக்குவம் அருள்கிறான்.

எல்லோரும் விருந்துண்ண அமர்ந்து விட்டார்கள். எம்பெருமான் இராமபிரான் அனுமனை அழைக்கிறான். ''ஆஞ்சநேயா ! நீ உடனே அயோத்திக்குச் செல். பரதனைக் காப்பாற்று. இந்தா ! அடையாளத்துக்கு இந்த முத்திரைமோதிரம்'' என்று கூறி அனுப்புகிறான்.

**''இன்று நாம் பதி வருதுமுன் மாருதி ! ஈண்டச்**
**சென்று தீதின்மை செப்பி, அத்தீமையும் விலக்கி**
**நின்ற காலையின் வருதும் என்று ஏயினன்நெடியோன்**
**நன்றெனா அவன் மோதிரம் கைக்கொடு நடந்தான்''**

என்பது கம்பசித்திரம். காற்றையும் இராமபிரான் அம்பையும் விட, வேகமாகச் செல்லும் மாருதி, குகனுக்கும் செய்தி கூறி அயோத்தியை அடைகிறான். அங்கே இராமன் வரவில்லை என்று பரதன் தீயில் பாயத் துணிகிறான். கோசலை தடுத்தும் மறுக்கிறான். அரசாட்சியைத் தம்பி சத்துருக்கனிடம் கொடுத்து விட்டுத் தீயில் பாய எண்ணுகிறான். அரசைஏற்கத் தம்பி மறுக்கிறான். இந்நிலையில் அனுமன் தோன்றிக் கையினால் தீயை அவிக்கிறான். ''ஐயன் வந்தனன் சூரியன் வந்தனன்'' என்று பரதனுக்கு மங்கல வாக்கினால் உயிர்கொடுக்கிறான்.

''பதினாலாண்டுகள் முடிய இன்னும் நாற்பது நாழிகை உள்ளது. அதற்குள் இராமன் வந்து விடுவான். அப்படி வராவிட்டால் இந்தத் தீயில் உனக்கு முன் நான் விழுந்து விடுவேன். நான் இராமதூதன். இந்த மோதிரம் அடையாளம்'' என்றான் அனுமன். மோதிரத்தைக் கண்ட பரதன் மகிழ்ந்தான். வேதியரைத் தொழுதான். வேந்தரைத் தொழுதான், தாதியரைத் தொழுதான், தன்னையே தான் தொழுதான். காதல் என்பதும் கள்ளைப் போன்றதே என்று நிலைநாட்டினான். அனுமனைத் தழுவினான். பரிசு கொடுத்தான். அனுமன் தன் வரலாறும் தலைவன் செயல்களும் கூறினான். இந்நிலையில் புட்பக விமானம் வந்தது. கானிடைப் போகிய கமலக் கண்ணனைத் தானுடை உயிரினைத் தம்பி நோக்கினான். ஈன்றவள் பகைஞனை எம்பிரான் நோக்கினான். இது மனத்தை உருக்கும் காட்சி.

இக்காட்சியைப் படிக்கும் பொழுது நமக்கு ஒரு சந்தேகம் வருகிறது. பரத்துவாஜர் ஆசிரமத்தில் விருந்துண்ணாமல் இராமனே விரைவாகப் பரதனிடம் வரலாமல்லவா? ஏன் தான் வராமல் அனுமனை அனுப்பினான். அனுமனை அனுப்ப என்ன காரணம்? இந்த வினாவுக்கு விடை திருமந்திரத்தில் உள்ளது.

சைவத் திருமுறைகளில் பத்தாம் திருமுறை என்பர். அந்தப் பத்தாம் திருமுறை திருமந்திரம்.சாத்திரமும் தோத்திரமும் ஆன நூல் தீவினை மாற்றும் திருமந்திரம் ஆகும். ''ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்'' என்பதும் ''யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்'' என்பதும் திருமந்திரக் குறிக்கோள்கள்.

**''சக்கர வர்த்தி தவராஜ யோகி எனும்**
**மிக்கதிரு மூலனடி மேவுநாள் எந்நாளோ''**

என்று தாயுமானவரால் போற்றப்படும் திருமூலர்

திருவாவடுதுறையில் அரசமரத்தின் கீழ் ஆயிரக்கணக்கான ஆண்டுகள் தவமிருந்து திருமந்திரத்தை இயற்றினார். இந்நூலில் சிறப்புப்பாயிரத்தில் முப்பத்தாறாவது பாடல் நம்முடைய வினாவுக்கு விடைதருகிறது.



**''அப்பனை, நந்தியை, ஆரா அமுதினை,**
**ஒப்பிலி வள்ளலை, ஊழி முதல்வனை**
**எப்பரி சாயினும் ஏத்துமின் ஏத்தினால்**
**அப்பரிசு ஈசன் அருள்பெற லாமே''**

என்பது அப்பாடல், ''தந்தையாயிருப்பவனை, தனக்கொரு பற்றிலாதவனை, சிறந்த அமுது போன்றவனை, கேட்டவர்க்குத் தன்னையே கொடுக்கும் ஒப்பற்ற வள்ளலை, ஊழிக் காலத்தும் அழியாதிருந்து மீண்டும் உலகை உண்டாக்கும் முதல்வனாய் இருப்பவனை எந்தத் தன்மையிலாவது வழிபடுங்கள். வழிபட்டால் அந்தத் தன்மையில் இறைவன் உங்களுக்கு அருள் புரிவான்.'' இது இப்பாடலின் திரண்ட பொருள்.

இறைவனை எப்படி வழிபடுகிறோமோ அப்படி அவன் அருள் புரிவான் என்கிறார் திருமூலர். சிவபெருமான் என்றெண்ணி வழிபட்டால் இறைவன் சிவபெருமான் வடிவத்தில் நமக்கு அருள் புரிவான். முருகன் என்று எண்ணி வணங்கினால் முருகனாய்த் தோன்றி அருள் புரிவான். பரதன் பதினாலாண்டுகள் எதை வழிபட்டான்? இராமபிரானுடைய திருவடிகளைத்தானே வழிபட்டான்! எனவே பரதன் தீயில் விழாமல் காப்பதற்கு இறைவன், திருவடியின் வடிவத்தில் தானே வர வேண்டும்! அனுமனுக்குச் சிறிய திருவடி என்று பெயர். எனவே திருவடியை வைத்து வணங்கிய பரதனைக் காப்பாற்ற இராமபிரான் தன்னுடைய சிறிய திருவடியாகிய அனுமனை அனுப்பிவைக்கிறான்.

இப்படி, **இராமாயணப் பூட்டைத் திருமந்திரச் சாவி திறந்து வைக்கிறது.** கங்கை நிறையத் தண்ணீர் ஓடுகிறது. அண்டாவைக் கொண்டு சென்றவன் அண்டா நிறையத் தண்ணீர் கொண்டுவரலாம். செம்பு கொண்டு சென்றவன் செம்பு நிறைய நீர் கொண்டு வரலாம். கையைக் கொண்டு சென்றவன் கைநிறைய நீர் எடுக்கலாம். தண்ணீர் இல்லை என்று பொய்யைக் கொண்டு சென்றவன் ஒன்றுமில்லாமல் அந்தப் பொய்யோடு திரும்ப வேண்டியது தான். கடவுளும் இப்படித்தான். நம் நினைப்பே கடவுளின் வடிவம் ஆகும். எதை வணங்குகிறோமோ அதன் வடிவில் இறைவன் நமக்கு அருள் புரிகிறான். இதையே இராமாயணமும் திருமந்திரமும் கூறுகின்றன. நம்மிடம் பூட்டும் உள்ளது சாவியும் உள்ளது போட்டுத் திறக்கப் புத்தி மட்டும் குறைந்து விட்டது என்று எண்ணத் தோன்றுகிறதல்லவா!

எதை நினைக்கிறோமோ அதுவாகவே நாம் மாறிவிடுகிறோம். ஆண்டவன் அடியாராக நினைத்து நடித்தால் கூடப் பரவாயில்லை. உண்மையான அடியாராக மாறிவிடலாம்.

**''நாடகத்தால் உன்னடியார் போல் நடித்து நான்நடுவே**
**வீடகத்தே புகுந்திடுவான் மிகப்பெரிதும் விரைகின்றேன்''**

என்பது திருவாசகம். நல்லவனாக நடியுங்கள் நல்லவனாக மாறுவீர்கள். எப்படியாவது இறைவனை நினையுங்கள். அந்த அளவுக்கு இறைவன் உங்களை நினைப்பான்.

ஆலயத்தில் பலபேர் தங்கள் செல்வத்தினாலும் செல்வாக்கினாலும் பதவியினாலும் முன்னே போய்க் கருவறைக்கு மிகப் பக்கத்தில் நின்று திருமேனியை நன்றாகப் பார்க்கிறார்கள். பலபேர் கடைசியில் நின்று மிகச் சிரமப்பட்டு, முன்னால் நின்று மறைப்பவர்கள் விலகினால் மட்டுமே இறைவன் திருமேனியைப் பார்க்கிறார்கள். இவர்களில் யார் பேறுபெற்றவர்கள்? நிச்சயமாகப் பின்னால் நிற்பவர்கள் தான். ஏன்? முன்னால் நிற்பவர்கள் இறைவனை நன்றாகப் பார்க்கிறார்கள். பின்னால் நிற்பவர்களை இறைவன் நன்றாகப் பார்க்கிறான். நாம் அவனைப் பார்ப்பதை விட, அவன் நம்மைப் பார்ப்பது சிறப்பல்லவா?

திருமந்திரம் படித்து, சிவபெருமானைச் சிந்தித்தால் போய பிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும். எப்படியாவது இறைவனை வணங்குவோம். பிறவிப் பயன் பெறுவோம். இறைவன் இசைபயில சடாட்சரமதாலே இகபர சௌபாக்கியம் அருள்வான்.



சங்கத்தமிழின் தலைமைப் புலவரான செந்தமிழ் முருகனைச்சங்கத் தமிழால் பாடியவருள் தலையானவர் அருணகிரிநாதர். இவர் 'வாக்குக்கு அருணகிரி', 'கருணைக்கு அருணகிரி', 'சந்தத்திற்கு அருணகிரி, எனப் போற்றப்படுகிறார். திருப்புகழ், கந்தரலங்காரம். கந்தரனுபூதி, வேல் விருத்தம், மயில் விருத்தம். வேளைக்காரன் வகுப்பு என்று பல நூல்களைப் பாட்டுடைத்தலைவன் முருகன் மீது பாடியருளியவர்.



அழகன் முருகன்

முருகன் என்றாலே அழகன் என்று பொருள் என்பார் திரு.வி.க. அழகால் மன்மதனை வெல்லக் கூடியவர் குமாரன். (குத்ஸிதான் மாரயிதீ இதிவா; குமார:) ஆயிரம் கோடிக் காமர்கள் வந்தாலும் முருகனின் திருவடி மலர்களின் அழகுக்கு ஈடாகமாட்டார். முருகன், குமரன், நாதன், அழகன், கிருபாகரன், அயில் வேலன், குகன், கந்தன், கடம்பன், கார்மயில் வாகனன், வெற்றிவேலோன், தேசிகன், ஆறுமுகன், கார்த்திகேயன், சரவணபவன், சண்முகன், தெய்வசிகாமணி, வேலவன், செவ்வேள் என்று எத்தனை அழகான பெயர்களால் முருகனைக் கந்தர் அலங்காரத்தில் அழைக்கிறார் பாருங்கள்.

# அலங்கார நாயகன்

(டாக்டர். சரசுவதி இராமநாதன். பள்ளத்தூர்.)

அலங்காரம் படிக்கவும்.

''அழித்துப் பிறக்க ஒட்டா அயில் வேலன் கவியை அன்பால் எழுத்துப் பிழையறக் கற்கின்றிலீர்'' ஏன் படிக்கவில்லை! எப்போது படிப்பீர்கள், எரி மூண்டது போல் விழித்து, எமன் காலபாசம் விட்டுக் கழுத்தில் சுருக்கிட்டு இழுக்கும் போதா படிக்க முடியும்! யமபயம் வேண்டாம் என்றால் அலங்காரம் படியுங்கள் என்கிறார் அருணகிரிநாத சுவாமிகள்.

நமது உடம்பில் உள்ள ஐந்து பொறி புலன்கள் நம்மை அலைக்கழிக்கும். கண் ஒன்றைக் காணும். காது ஒன்றைக் கேட்கும். மனம் எதையோ நினைக்கும். அதை எல்லாம் ஒருமுகப்படுத்த, அறுமுகன்துணை நமக்குத் தேவை.

''ஒர ஒட்டார், ஒன்றை உன்ன ஒட்டார்,
ஒண்மலரிட்டு உனதாள்
சேர ஒட்டார் ஐவர், செய்வதென் யான்!''

''குப்பாசவாழ்க்கையுள் கூத்தாடும்
ஐவரில் சொட்பமடைந்த
இப்பாசநெஞ்சனை ஈடேற்றுவாய்!''

''ஐவர்க்கு இடம்பெறக் காலிரண்டு
ஒட்டியதில் இரண்டு
கை வைத்த வீடு குலையு முன்னே
வந்து காத்தருளே!''

என்றெல்லாம் வேண்டுவோம் அப்போது.

''விழிக்குத் துணை திருமென் மலர்ப்
பாதங்கள், மெய்மை குன்றா
மொழிக்குத் துணை முருகா எனும்
நாமங்கள், முன்பு செய்த
பழிக்குத் துணை அவன் பன்னிரு
தோளும், பயநததனி
வழிக்குத் துணை வடிவேலும்
செங்கோடன் மயூரமுமே!''

எனத்துணைவருவான்.

அவன், மண்ணுலகத்து உயிர்களான நமக்கு அருள்புரிய மண்ணிலே வந்து உதித்து, மலை நாட்டில் வளர்ந்து தினைப்புனம் காத்த தமிழ்மகள் வள்ளியோடு வருவானும். வண்ணமயிலேறி வருவானாம்.

''நீலச்சிகண்டியில் ஏறும் பிரான் எந்த நேரத்திலும்
கோலக் குறத்தியுடன் தான் வருவான்''
(அலங்காரம் 26)

வள்ளி, தமிழால் அவனை 'ஏடா, மூடா, வேடா, போடா' என்று ஏசினாலும் அவளே முருகனின் இச்சா சக்தி காதல் மணவாட்டி. ஆகவே முத்தமிழால் யாராவது வைதாலும் கூட முருகன், அவர்களை வாழவைப்பானாம். (அதனால்தான் திட்டுகின்றவர் கூட வளமாக வாழ்கின்றாரோ?)

''மொய்தார் அணிகுழல் வள்ளியை வேட்டவன்
முத்தமிழால் அங்கு
வைதாரையும் வாழவைப்பான் (22)
வேலே விளங்கு கையானை வாழ்த்துவதை விட்டு வேறென்ன செய்கிறாய்?''

''வேலை வணங்குவதே வேலை - வடி
வேலை வணங்காமல் வேறென்ன வேலை''

இச்சை பெண்கள் பேச்சை இலச்சையில்லாமல் ''பால் மொழி'' எனப் புகழ்கிறீர்கள், அவர்கள் திருவடிகளைச் செம்பஞ்சு என்கிறீர், அவர்தம் விழி, வேல், கயல் என்கிறீர்கள். அதற்கு மாறாகத் திருச்செந்திலோன் கை வேலைப்பாடுங்கள். வீரமிகுந்த மயில், அழகு மயில். நம் தேசியப் பறவை, முருகனின் வாகனம் - அதைப் போற்றுங்கள் வெட்சி யணிந்த தண்டைக் காலைப் பணியுங்கள். முக்தி அடைவது எளிது (30) என்று அறிவுறுத்துகிறார்.

அடியார்க்கு நல்ல பெருமான்

ஜோதிடம் - அற்புதமான கலை. பன்னூறு ஆண்டுகட்கு முன்பே இந்தியர் அறிந்திருந்த அற்புதமான கலை. ஆனால் எப்போதும் விதி, சோதிடம், கிரகம் என்றே வெம்பி, வெதும்பிப் போகலாமா? கவலைப் பட வேண்டாம். கந்தன் காலடியில் நம்பிக்கை வையுங்கள். நம்பிக் 'கை' வைத்துப் படியுங்கள். விதி என்ன செய்யும்?

''நாள் என் செயும்? வினைதான் என் செயும்? எனை நாடிவந்த
கோள் என்செயும்? கொடுங் கூற்றென் செயும்? குமரேசர் இரு
தாளும் சிலம்பும், சதங்கையும், தண்டையும், சண்முகமும்,
தோளும் கடம்பும் எனக்கு முன்னே வந்து தோன்றிடினே - 38

என்று பெருமிதத்தோடு பாடலாமே! அவனிருதாளைப் பிடித்திடுவோம்! முடியப் பிறவிக்கடலிற் புகத்தேவையில்லை. முழுதும் கெடுக்கும் பிடியால் விசனப்பட வேண்டாம் அவன் எப்போதும் அடியார்க்கு நல்லபெருமான்.

தலையெழுத்து மாறுமா?

''எல்லாம் என் தலையெழுத்து ஐயா!'' ''என்விதி இப்படி என்ற வாக்கியம் எங்காவது யாராவது தினம் சொல்வதைக் கேட்கத்தான் எழுதினான். நம்மைப் படைத்த இறைவன் தான் அந்த எழுத்தாளன்.

''இட்ட முடன் என் தலையில் இன்னபடி என்றெழுதி
விட்ட சிவனும் செத்து விட்டானே?''

என்று ஔவை கூட மனம் நொந்து பாடியுள்ளாள்.

'பிரம்ம விபி' என்று வட மொழியில் சொல்லுவர் அதை என்று எதனை வைத்து,இறைவன் எழுதினான்? தெரியாத புதிர்! ஆனால் விதிப்படி எல்லாம் நடக்கின்றன. சிரிக்க வேண்டிய நல்லவன் சீரழிந்து அழுகிறான். அழ வேண்டிய பாதகன் சிரித்துக் கும்மாளம் அடிக்கிறான் ஏன்? ஊருக்கு உபகாரி சோதனை மேல் சோதனை வந்து வாதினைப்பட்டு, வேதனையில் வெம்புகிறான் ஏன்? உயர்ந்த மகான்களும், புற்று பிளவை நோய் வந்து மடிவது ஏன்? தலைவிதி - என்பது தவிர என்ன விடை தர முடியும்?

அந்த விதியை யார் மாற்றுவார்? கவலை வேண்டாம். கந்தன் கால், பிரமன் கை எழுத்தை அழிக்கும் (அலங்காரப்பாடல் 40)

''சேல்பட் டழிந்தது செந்தூர் வயற்பொழில் தேங்கடம்பின்
மால்பட் டழிந்தது பூங்கொடியார் மனம் மாமயிலோன்
வேல்பட் டழிந்தது வேலையும் சூரனும் வெற்பும் அவன்
கால்பட் டழிந்ததிங்கு என்தலை மேல் அயன் கையெழுத்தே''

கடைசி ஒரு அடிபோதும், ஈரடியை, எப்போதும், நாளும் வேதம் சொல்லி ஐம்புலனடக்கி, அறுமுகனை வேண்டி எழு பிறவி (இனி வரும் பிறவி) இல்லாததாக ஆக்கிக் கொள்வோம்.

தேவாதி தேவர்கள் சூரபதுமன் ஆட்சியில் அவதிப்பட்டுச் சிறையில் வாடி, வாழ முடியாமல் அமுதம் உண்டதால் சாகவும் முடியாமல் துயரப்பட்டனர்.

''நெறிதவறி அலரிமதி நடுவன்மக பதிமுளரி
நிருதிநிதி பதிகலிய வனமாலி
நிலவுமறை அவனிவர்கள் அலையஅர சுரிமையுரி
நிருதனுர மறஅயிலை விடுவோனே!''

என்று, திருப்புகழில் இதைக் கூறுவர் அருணகிரியார்.

அவர்களை விடுதலை செய்தவன் யார்! அமரர் இடர் தீர அமரம் புரிந்த குமரவேள்தானே! அமரர் சிறை மீட்ட பெருமாள் அறுமுகன் தேவாதி தேவர்களின் தலை எழுத்தை மாற்றினானே. நக்கீரர் முதலாகப் பாதாளச் சிறையிலிருந்து ஆயிரம் பேரைத் திருமுருகாற்றுப்படை கேட்டு, மகிழ்ந்து, விடுதலை செய்த வீரவேலன் கந்தன் அல்லவா!

ஊமையாய்ப் பிறந்த குமரகுருபரரை உலகு புகழ்க்கவிராக சிங்கமாக மாற்றியவன் செந்திற்பதியுரையும் செவ்வேள் தானே 'பூமேவு செங்கமல' என்று தொடங்கிக் குட்டிக்கந்தபுராணமாகக் கந்தர் கலி வெண்பா பாடவைத்த குருநாதன் சேந்தனல்லவா!

அருணையில், வல்லாள மகாராஜா கோபுரத்திலிருந்து விழுந்து உயிர்விடப் போன அருணகிரிநாதரைக் காப்பாற்றி நாவில் ஷடாச்சர மந்திரம் எழுதி, 'முத்தைத் திரு பத்தித் திருநகை' என முதலடி கொடுத்துப் பாடவைத்து அவரைத் தன் திருப்புகழைப் பாடவைத்த கருணைக்கடல் கிருபாகரன் கார்த்திகேயன் அன்றோ!

நம் தலை எழுத்தையும் மாற்றும் வல்லபம் கந்தனுக்கே உண்டு. இதை உறுதியாக நம்பும் அருணகிரிநாத சுவாமிகள் தன் அனுபவத்தையும் வைத்தே

> **''அவன் கால் பட்டழிந்த திங்கு**
> **என்தலை மேலயன் கைஎழுத்தே!''**

என்று பாடுகிறார்.

**சேவடி எங்கே?**

அதெல்லாம் இருக்கட்டும்! கந்தன் காலடியில் நம் தலை தாழ்ந்து விட்டால் நம் தலை எழுத்து மாறும் என்பது சரிதான்! செவ்வெளின் சேவடியை எங்கு நான் பற்றுவேன்.

> **''திருப்பரங்குன்ற மலையிலா**
> **திகழும் செந்தமிழ்க் கவியிலா?**
> **செந்தூர், திருத்தணித் தலத்திலா**
> **மயில் திகழும் குன்றம் விராலிமலையிலா''**

என்று ஒருவர் கேட்கிறார், அதற்கும் விடை இதோ

> **''காவடி ஓட்டும் மயிலிலும், தேவர் தலையிலும்**
> **என் பாவடி ஏட்டிலும் பட்டதன்றோ!''**

திருமுருகன் திருவடிகள் என்கிறார்

அருணகிரிநாதரின் பாடலில் கந்தன் சேவடிகள் தங்கியுள்ளன. அதைப் பாடினாலே முருகனின் தண்டைச் சிற்றடியைப் பிடித்துக் கொள்ளலாம். ஆகவே அலங்காரத்திற்குரிய அழகு நாயகன் முருகனே! ● ●

# இடர் களைவாய் இறைவா

**சிவ. அம்பலவாணன்**

வினையின் பயனாய் ஆன்மாக்களுக்கு ஏற்படும் அல்லல்களை களைவது இறைவன் அருள். அவன் அருளின்றி இடர்கள் அகலா. அருள் கிட்டின் பகலவன் கண்ட பனி போல் விலகும் என்பது நிச்சயம்.

அடியார்களுக்கு ஏற்படும் இடர்களைக் களையும் இறைவனைப் போற்றித் துதிக்க திருமுறைகளில் மூவர் தேவாரங்களில் நான்கு இடர்களையும் பதிகங்கள் உள்ளன. அத்தகைய பதிகங்கள் திருமறைக்காட்டிலிருந்து மதுரைக்கு மங்கையர்க்கரசியின் வேண்டுதல்படி சைவம் தழைத்தோங்கவும், சமணம் விலகவும் புறப்பட்ட திருஞானசம்பந்தரின் பயணத்தின் முன்பு ''நாளும், கோளும்'' சரியில்லையென்று கூறிய அப்பர் பெருமானுக்கு பதிலுரையாக வெளியிட்ட பதிகம் சம்பந்தரின் ''கோளறு பதிகமாகும்''

திருநெடுங்களத்தில் அருளிய ''மறையுடையாய் தோலுடையாய்'' என்ற பதிகமும், ஆவடுதுறையில் அருளிய ''இடரினும் தளரினும்'' எனும் பதிகமும், வடதிருமுல்லைவாயிலில் சுந்தரரின் திருப்பாட்டாக வெளியிடப்பட்ட ''திருவும்'' என்ற பதிகமும் என்பர் சைவ நல்லுலகத்தினர். திருநெடுங்களத்தில் அருளிச் செய்த முதலாம் திருமுறையில் இரு பதிகத்தினை சென்ற இதழ்களில் கண்டோம். இவ்விதழில் ''நின்னடியே'' எனத் தொடங்கும் பதிகத்தினைக் காண்போம்.

> **''நின்னடியே வழிபடுவா னிமலாநினைக் கருத**
> **என்னடியா னுயிரைவ்வே லென்றடற்கூற் றுதைத்த**
> **பொன்னடியே பரவிநாளும் பூவொடுநீர் சுமக்கும்**
> **நின்னடியா ரிடர்களையாய் நெடுங்களமேயவனே''**

திருநெடுங்களத்திலே விரும்பிக் கோயில் கொண்டுள்ளவனே! உன்னுடைய திருவடியை வழிபடுபவனாகிய மார்க்கண்டேயன் உன்னைத் துதிக்க ''இவன் என்னுடைய அடியவன், இவன் உயிரைக்கவரேல்'' என்று அடர்த்து வந்த கூற்றினை உதைத்த உன்னுடைய பொன்னடிகளையே போற்றி நாள்தோறும் உன்னை வழிபடுவதற்காகப் பூவும் நீரும் சுமக்கின்ற உன் அடியார் இடர்களைக் களைந்து அருள் செய்வாயாக.

நம் இடர்கள் களைய ஞானசம்பந்தர் அருளிச் செய்துள்ள முதலாம் திருமுறையில் வரும் இப்பாடலை இம்மாத பாராயணப் பகுதியாகக் கொண்டு பாராயணம் செய்து பலன் பெறுவோமாக.

# காலப் பெட்டகம்

# வள்ளிசேர் பாக்கம்

(வளசரவாக்கம்)

க. குழந்தை வேலன்,
தொல்பொருள் ஆய்வுத்துறை,
சென்னை



பழமையும் பெருமையும் வாய்ந்த பல ஊர்கள் புதுமை வாய்ந்த சென்னைப் பெருநகரப் பகுதிகளாக மாறி வருகின்றன. இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் உருவாகியுள்ள வடபழனியின் வளர்ச்சிக்குள் தனது ஈராயிரமாண்டு பழமையை மாய்த்துக் கொண்டது புலியூர் என்னும் பழவூர்.

சான்றோர் நிறைந்த தொண்டை மண்டலத்து இருபத்துநான்கு கோட்டங்களுள் புலியூர்க் கோட்டமும் ஒன்று. இன்றைய ஆட்சிப் பிரிவில் அமைக்கப்பட்ட கோட்டாட்சிப் பகுதி போன்ற பழங்கோட்டத்தின் தலைநகராக விளங்கியது புலியூர். புலியூர்க் கோட்டத்தில் புலியூர் நாடு, எழுமூர் நாடு, கோட்டூர் நாடு, சுரத்தூர் நாடு (திருச்சுரம்- திரிசூலம்) மாங்காட்டு நாடு போன்ற பல நாடுகளில் ஒன்று பேறூர் நாடு. பேறூர் என்பது கிண்டிக்கும், பூந்தண்மலிக்கும் இடையில் உள்ள இன்றைய போரூரேயாகும். இப்பேறூரும் மிகப் பழமை வாய்ந்ததே. முதலாம் இராசேந்திர சோழன் காலத்திற்கு முன்பே இங்கும் பெருங்கோயில் ஒன்று கட்டப்பட்டிருந்தது. இவை போன்ற பல செய்திகள் சென்னைப் பெருமக்களுக்குப் புதுச் செய்திகளாகும்.

தொண்டை மண்டலம் சோழர்களின் ஆட்சிக் காலத்தில் முதலாம் இராசராசனின் (985 - 1014) பட்டப் பெயர்களுள் ஒன்றான செயங்கொண்ட சோழன் என்ற பெயர் சூட்டப்பட்டு செயங்கொண்ட சோழ மண்டலம் என வழங்கப்பட்டது. இதே போல் புலியூர்க் கோட்டமும் முதல் குலோத்துங்கன் காலத்தில் (1070-1120) குலோத்துங்க சோழ வளநாடு எனப் பெயர் மாற்றம் செய்யப்பட்டது. இந்தச் செயங்கொண்ட சோழ மண்டலத்துப் புலியூர்க் கோட்டமான குலோத்துங்கசோழ வள நாட்டுப் பேறூர் நாட்டில் உள்ள பழைய ஊர் வள்ளிசேர் பாக்கம். இன்று வளசரவாக்கம் என மருவி வழங்குகின்றது. வள்ளிசேர் என்பது வள்ளிசேர-வள்ளிசர-வளசர என மருவியது. பாக்கம் என்பது வாக்கம்என மாறும். நீண்ட நாள் திருத்தமின்றி வழங்கியதன் காரணமாக வள்ளிசேர் பாக்கம் இன்று வளசரவாக்கமாகி விட்டது. முன்னைப் பெயரின் எழுத்து வடிவம் அறியப்படாமையால் இக்காலத்தவரும் அவ்வாறே எழுதி விட்டனர்.

வள்ளிசேர் பாக்கம் இன்று சென்னை மாநகர தென்மேற்கு எல்லையில், காஞ்சிபுரம் மாவட்டத்துத் திருப்பெரும்புதூர் வட்டத்தின் கிழக்கு எல்லையில், சென்னை நகரப் புதுக் கோலத்தில் தன்னையும் இணைத்துக் கொள்ளும் அவாவோடு வேகமாக வளர்ந்து வரும் ஊராக உள்ளது. புலியூர், கோடம்பாக்கம் (பேறூர்) என்னும் பழமையான ஊர்கள் வழியாகச் செல்லும் ஆர்க்காட்டுப் பெருவழியில் கோடம்பாக்கத்தி லிருந்து எட்டு கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது வள்ளிசேர்பாக்கம் (வளசரவாக்கம்)

வள்ளிசேர்பாக்கத்தின் பழமையைப் பறை சாற்றும் வரலாற்றுச் சின்னங்களாக ஆர்க்காட்டுச் சாலையை ஒட்டி தெற்கில் இரண்டு சிவன்கோயில்கள் அமைந்துள்ளன. அவற்றுள் ஒன்று திருவேழ்வீசுவரமுடையார் கோயில், மற்றொன்று திருவகத்தீசுரமுடையார் கோயிலாகும்.

இரட்டைக் கோயில்களான திருவேழ்வீசுரமும், திருவகத்தீசுரமும் காட்சிக்குத் தற்காலக் கோயில்களைப் போலத் தோன்றினாலும் காலத்தால் பழைமையானவை என்பதற்குத் திருவகத்தீசுர முடையார் கோயிலில் உள்ள கல்வெட்டே சான்றாகும். மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் (கி.பி. 1182) திருவேழ்வீசுவரமுடையார் கோயிலுக்கு மூன்று விளக்கெரிப்பதற்காகக் கொடையளிக்கப் பட்ட செய்தி இக்கல்வெட்டில் கூறப்பட்டுள்ளது.

ஔவையாரின் ஆத்திசூடி என்ற அற நூலில் 'ஙப்போல் வளை' என்றொரு நூற்பா வரி உள்ளது. ங என்ற ஓரெழுத்து நின்று வழக்கில் இல்லாத தன் இனவெழுத்துக்களையெல்லாம் வாழ வைப்பது

போல திருவகத்தீசுரத்துக் கல்வெட்டு பழமைச் சான்றுகள் எதுவுமில்லாத திருவேழ்வீசுரத்தின் பழமையைக் காத்து நிற்கிறது. தனக்கு ஏதும் பயனில்லாத கல்வெட்டைத் தாங்கி தன்னையும், தன்னொத்த தன் இணைக் கோயிலையும் வெளிப் படுத்துவதில் திருவகத்தீசுரம் சிறப்பு பெற்றுள்ளது. இக்கல்வெட்டு, கோயில் கட்டுமானத்தைப் பற்றி எதுவும் கூறாததால் இக்கோயில்கள் இரண்டும் மூன்றாம் குலோத்துங்கன் காலத்துக்கு முன்பே வழிபாட்டில் இருந்தன என்பதை அறியலாம். எனவே வள்ளிசேர்பாக்கம் ஆயிரமாண்டுகளுக்கு மேற்பட்ட பழமையுடையது என்பதில் ஐயமில்லை. அதன் பழமைக்கு எல்லை வகுப்பது அரிது. இக்கல்வெட்டும் கல்வெட்டுச் செய்தியும் கட்டுரையின் இறுதியில் விரிவாகக் கொடுக்கப் பட்டுள்ளன.

திருவேழ்வீசுரமும், திருவகத்தீசுரமும் உருவில் சிறியவையாயினும் வரலாற்றில் காலத்தால் பழையவை. வடக்குப் புறத்தில் திருவகத்தீசுரமுடையாரும், தெற்குப்புறத்தில் திருவேழ்வீசுரமுடையாரும் இரட்டைப் பிள்ளைகள் போல இணையாக கிழக்கு நோக்கி அமைந்துள்ளன. திருவகத்தீசுரமுடையார் கோயிலின் கால்பகுதி குமுதப்படை மற்றும் பட்டிகை வரை (அதிட்டாணப்பகுதி) முழுதும் கருங்கல்லால் கட்டப்பட்டுள்ளது. அதன் மேலுள்ள சுவர், கொடுங்கை, தலைப்பகுதிகள் (சிகரம்) செங்கல்லாலும் சுதையாலும் கட்டப்பட்டுள்ளன. இவை பலமுறை திருப்பணிக்கு ஆளாகி தற்கால அமைப்புடையனவாகத் தோற்றமளிக்கின்றன. திருவகத்தீசுரம் சிறிய அளவுள்ள உண்ணாழிகையும் (கருவறை) முன்மண்டபமும் கொண்ட சிறுகோயில் இக்கோயிலில் பழஞ்சிற்பங்கள் ஏதும் இல்லை. காலம் அவற்றையெல்லாம் கரந்து (மறைத்து) விட்டது போலும்.

தெற்குப்புறத்தில் உள்ள திருவேழ்வீசுரமும் சிறிய கோயிலே. திருவகத்தீசுரத்தைப் போலல்லாது முற்றிலும் செங்கல் மற்றும் சுதையால் கட்டப்பட்ட செங்கல் தளி. இதுவும் சிறிய உண்ணாழிகையும், முன்மண்டபமும் கொண்ட எளிய அமைப்புடையது. செங்கல் தளி (கோயில்) ஆதலால் பல திருப்பணிகளுக்குள்ளாகி பிற்காலக் கோயில் போல் காட்சியளிக்கிறது. இக்கோயிலிலும் சிற்பங்கள் ஏதுமில்லை. இரு கோயில்களும் ஒரே திருச்சுற்றில் அமைக்கப்பட்டு வழிபடப்பட்டிருக்க வேண்டும். திருக்கோயில்கள் இரண்டும், திருக்குளமும் திருநந்தவனமுமாகத் திரு குடி கொண்ட கோயிலாகத் திகழ்ந்திருக்க வேண்டும் என்பதில் ஐயமில்லை. அதனை மெய்ப்பிப்பது போல் இக்கோயில்களின் முன் கரையிழந்த பெரிய திருக்குளம் காணப்படுகிறது. பண்டைய திருச்சுற்றுச் சுவர்களும் நந்தவனமும் அழிந்து விட்டன. அதற்குரிய அடிச்சுவடுகள் காணப்படுகின்றன.

சில ஆண்டுகளுக்கு முன்வரை கவனிப்பாரற்று கிடந்த இக்கோயில்கள் மீண்டும் வழிபாட்டில் திளைத்து களைகட்டியுள்ளன. திருப்பணிகளும் பூசைகளும் படையலும் சிறப்பாக நடைபெறுகின்றன. பெருமாள் கோயில் இல்லாக் குறையைப் போக்க இக்கோயில் வளாகத்தின் தென்மேற்கு மூலையில் புதிய பெருமாள் கோயில் எடுக்கப்பட்டு வழிபாடு நடத்தப் பெற்று வருகிறது. மூன்று கோயில்களையும் உள்ளடக்கிய திருச்சுற்று அமைக்கப்பட்டு வருவதும் திருக்குளச் சீர்திருத்தமும் வள்ளிசேர் பாக்கத்தின் பழமையைக் குன்றா வளத்துடன் போற்றும் திருப்பணிக்கு நல்ல எடுத்துக்காட்டாகும்.

திருக்கோயில்களின் முன்பு தண்ணீர் தளதளக்கும் திருக்குளத்தின் வடகரையில் ஆற்காட்டுச் சாலையை ஒட்டி 1931ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 22ஆம் நாள் சென்னையில் உள்ள ஆனைக்கெவுனி ஆதியப்ப நாயக்கன் தெரு 66ஆம் எண். சான்சன் சோடாக் கம்பெனி முகவர் சே. காமு. முருகேசச் செட்டியார் ஒரு சுமைதாங்கிக் கல்லை அமைத்துள்ளார். வழிப்போக்கர் நடைக் களைப்பு தீர ஓய்வு கொள்ளவும், விடாய் தீர நீரருந்தவும் ஏந்தான இக்கொடைகள் கோயிலை ஒட்டி அமைந்திருப்பது சிறப்புடையது. அக்காலத்தில் கோயிலும் கொடைகளும் மக்கள் மனதுக்கும், வாழ்வுக்கும் ஆறுதல் அளித்தன. கோடையில் இளைப்பாறக் குளிர் தரும் மரமாகவும், குளிர் நிழலாகவும் இருப்பதாகப் பாடுவது இவற்றைக் கண்டுதான் போலும். இத்தகைய கொடைகள் விரும்பி செய்யப்பட்டு மக்கள் நலம் காக்கப்பட்டது நமக்கு பழஞ்செய்தி. இச்சுமைதாங்கிக் கல் நம்மை



போன்றவருக்கு புதிய செய்தியாக இருப்பினும் வருங்கால வரலாற்றுக்கு உதவும் செய்தியாகும்.

இரட்டைக் கோயில்களுக்கு சற்று வடமேற்கில் ஆலப்பாக்கம் என்ற சிற்றூர் அமைந்துள்ளது. இன்று பழைய ஆலப்பாக்கத்தின் இருப்பிடத்தைத் தேடிக் கண்டு பிடிக்கும் அளவுக்கு வளர்நகரமாகி வருகிறது. நாளை இதன் வரலாறு அறியப்படாமலே போகலாம். பெயர் அமைப்பில் இதுவும் ஒரு பழவூராகவே இருக்க வாய்ப்புள்ளது. இவ்வூரின் வடகிழக்கு மூலையில் வள்ளிசேர பரமேஸ்வரர் என்ற ஒரு சிவன் கோயில் இருப்பது ஆய்வுக்குரியது.

தமிழ்நாட்டுக் கோயில்களும் இறைவரும், திருவெண்காடுடையார், திருமயிலார்ப்பிலுடையார், திருமயிலாடுதுறையுடையார் , திருவாலங்காடுடையார் என ஊரைச் சார்த்தியே பெயர் பெறுவது தமிழ்நாட்டு மரபாக உள்ளது. எனவே வள்ளிசேர பரமேஸ்வரர் என வழங்கும் வள்ளிசேர் பரமேஸ்வரர் என்ற பெயரும் ஊரைச் சார்த்தி பெற்ற பெயராக இருத்தல் வேண்டும் எனக் கருதுவதில் தவறில்லை. இக்கோயிலுக்கு வெகு அருகில் வள்ளிசேர்பாக்கம் இருப்பதால் இவ்வூரின் ஒரு பகுதியாக இக்கோயிலும் இருந்திருக்க வேண்டும். பழங்கோயில்களே இவ்வாறு ஊரடியாகப் பெயர் பெறுவதால் இக்கோயிலும் பழங்கோயிலே என்பதில் ஐயமில்லை. பல காலமாக ஏற்பட்ட திருப்பணிகளாலும் இன்றைய திருப்புதுக்காலும் அதன் பழந்தன்மையை அறிய இயலாமற் போய்விட்டது. ஒரு கால் ஆலப்பாக்கத்தில் உள்ள கோயில் வள்ளி சேர்பாக்கத்தில் இருந்து அழிவுற்று அதனை எடுத்துச் சென்று ஆலப்பாக்கத்தில் கட்டப்பட்டிருக்கவும் வாய்ப்புள்ளது. இவ்வாறு இடம் பெயர்த்துக் கட்டுவதும் வழக்கமாக இருந்துள்ளது. தகடூர் (தருமபுரி) மாவட்டம் அரூர் வட்டம் தாழையூர் கோயில் இதற்கு ஓர் நல்ல எடுத்துக் காட்டு. மேட்டூர் அணை கட்டப்பட்ட பொழுதும், பூண்டி நீர்த்தேக்கம் கட்டப்பட்ட பொழுதும் அங்குள்ள பல கோயில்கள் வெவ்வேறு இடங்களுக்கு எடுத்துச் செல்லப்பட்டு அதே பெயர்களால் கட்டப்பட்டதும் இங்கு ஒப்புநோக்க தக்கது. வள்ளிசேர் பரமேஸ்வரர் கோயில் அவ்வாறு மாற்றிக் கட்டப்பட்டதற்கான சான்றுகள் ஏதும் அறியப்படாத நிலையில் இதனை உறுதியாக கூற இயலவில்லை. இரண்டு ஊர்களும் அருகருகே இருப்பதால் பிற்கால நிலப்பிரிவு மாற்றங்களால் இடம் மாறி அறியப்படவும் நேர்ந்திருக்கலாம்.

இரட்டைக் கோயிலைத் தவிர வேறு கோயில்கள் இருந்ததாகவும், அவை அழிந்ததாகவும் செவிவழிச் செய்திகள் வழங்குகின்றன. வள்ளிசேர் பாக்கம் வளசரவாக்கமாக மாறினாலும் இறைவன் வள்ளிசேர் பரமேஸ்வரன் என்ற பெயரைத் தாங்கி வரலாற்றில் ஊர்ப்பெயரை அழியாது காத்துள்ளான். அதற்காக முக்கோயில் இறைவரவர் மூவரையும் கைதொழுவோம். நம்கோயில்களையும், கோயில் வழி கலைகளையும், நமது வரலாற்றுப் பெருமை களையும் காப்போம்.

திருவகத்தீசுவரமுடையார் கோயில் உண்ணாழிகையில் (கருவறை)யின் வெட்டப் பட்டுள்ள கல்வெட்டு வீர ராஜேந்திரன் என்று அழைக்கப்படும் மூன்றாம் குலோத்துங்கனின் நான்காவது ஆட்சியாண்டில் *(கி.பி.1182)* வெட்டப்பட்டதாகும்.



### கல்வெட்டு கூறும் செய்தி

செயங்கொண்ட சோழ மண்டலத்துப் (தொண்டை மண்டலத்து) புலியூர்க் கோட்டமான குலோத்துங்க சோழ வளநாட்டுப் பேறூர் (இன்றைய போரூர்) வள்ளிசேர்ப்பாக்கத்தில் திருவேழ்வீசுவர முடையார், திருவகத்தீசுவரமுடையார் என கோயில்கள் உள்ளன. இக்கோயில்களில் பூசைசெய்யும் காணி உரிமை பெற்றவன் மகாவிரதி காசியபன் தழுவக்

குழைந்தான் பண்டிதனான இடர் நீக்கிப்பட்டன் என்ற சிவப்பிராமணன்.

இதே புலியூர்க் கோட்டத்து மாங்காட்டு நாட்டு கொம்மைப்பாக்கத்தில் உள்ளது சோமீசுரமுடையார் என்னும் சிவன் கோயில். இக்கோயில் பூசைக்காணி உரிமை பெற்றவன் மகாவிரத அத்ரயன் உடைய பிள்ளையான செயங்கொண்ட சோழப் பிரம்மமாராயன் என்னும் சிவப்பிராமணன், இவன் வள்ளிசேர்பாக்கத்துத் திருவேழ்வீசுவரமுடையார் கோயிலில் மூன்று அந்தித் திருவிளக்கெரிக்க திருவேள்வீசுவரமுடையார் கோயில் காணியுடைய தழுவக்குழைந்தானிடம் மூன்றரை கண்ட கோபாலான் புதுமாடைக்காசு கொடுத்தான். இதனைப் பெற்றுக் கொண்ட தழுவக் குழைந்தான் திருவேழ்வீசுவரமுடையார் கோயிலில் ஞாயிறும் திங்களும் உள்ளவரை மூன்று விளக்கெரிப்பதாக உறுதியளித்து ஒப்புக்கொண்டான். இதுவே இக்கல்வெட்டின் செய்தி.

மாங்காட்டு நாட்டில் உள்ள கொம்மைப் பாக்கம் எதுவென்று இன்று அறிய இயலவில்லை. கொம்மைப்பாக்கத்து உடையார் சோமிசுவரமுடையார் என்னும் கோயில் பெயர் ஒற்றுமையைக் கொண்டு இன்றைய சோமங்கலமே அன்றைய கொம்மைப் பாக்கமாக இருந்திருக்கலாமோ என ஐயயுறத் தோன்றுகிறது. ஏனெனில் சோமங்கலம் என்பது பழந்தமிழ்ப் பெயரன்று. பிற்காலத்து இடப்பட்ட பெயரே. சரியான சான்று கிடைக்கும் வரை உறுதியாகக் கூற இயலாது.

கல்வெட்டு

1. ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவநச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ வீரராஜெந்திர சொழ தெவர்க்கு யாண்டு சிங்க நாயற்று பூர்வபக்ஷத்து ஏகாதெசியும்

புணர்பூசமும் பெற்ற நாயற்றுக் கிழமை நாள் ஜெயங்கொண்ட சொழ மண்டலத்து புலியூர்கொட்டமானகுலோத்துங்க.

2. சொழ வளநாட்டு பெறூர் நாட்டு வள்ளிசேர்பாக்கத்து உடையார் திருவகத்தீசுவரமுடைய நாயனாரும், திருவெழ்வீசுவரமுடைய நாயனாரும் இக்கோயில் சிவப்பிராமணக்காணி உடைய மஹாவ்தாசியபன்தழுவக்

3. குழைந்தாந் பண்டிதன் இடர் நீக்கி பட்டனென்இக்கொட்டத்து மாங்காட்டு நாட்டு கொம்மைப் பாக்கமுடையார் திருச்சொமீசுவரமுடைய நாயனார் கொயில் காணிஉடைய மஹாவிரத அத்ரயன் உடைய பிள்ளையான

4. ஜெயங் கொண்ட சோழ பிரம்ம மாராயர் பக்கல் திருவெழ்வீசுவரமுடைய நாயனார்க்கு அந்தி திருவிளக்கு மூன்றுக்கும் நான் கைக்கொண்ட கண்ட கொபாலன்புதுமாடை

5. மூன்றரையுங் கொண்டு சந்திராதித்தவரை திருவிளக்கு செலுத்தக்கடவென்ஸ்ரீமாகெசுவரரகை்ஷ.

# பக்தியின் ஒன்பது வகைகள்

பாகவதம், நாரத பக்தி சூத்திரம் ஆகிய நூல்கள் பக்தியினைப் பின்வருமாறு 9 வகைப்படுத்தி விளக்கிக் கூறுகின்றன.

1. யாதனம் - கோயில்கள் எடுப்பித்தல், திருநந்தவனம் அமைத்தல் முதலிய திருப்பணிகள்செய்தல்.
2. சிரவணம் - இறைவனின் வரலாறும் பெருமையும் பற்றிக் கூறும் நூல்களைத் தக்கவர்கள் சொல்லக் கேட்டு மகிழ்தல்.
3. கீர்த்தனம் - இறைவனின் திருநாமங்களை உச்சரித்தல், இசையுடன் பாடல்களைப் பாடுதல்.
4. அர்ச்சனம் - நீராட்டிப் பூச்சூட்டி நிவேதனம் படைத்துப் பூசித்தல்.
5. ஸ்துதி - இறைவனைப் புகழ்ந்து தோத்திரப் பாடல்களை இயற்றுதல் அல்லது பாடுதல்.
6. வசனம் - இறைவனின் அருட்பெருமைகளை எடுத்துப் பலருக்கும் கூறி விளக்குதல்
7. வந்தனம் - இறைவனை அஷ்டாங்கம், சாஷ்டாங்கம் முதலிய வகைகளிற்பணிந்து வணங்குதல்.
8. ஸ்மரணம் - இறைவனை எப்பொழுதும் மறவாமல் இருத்தல்.
9. தியானம் - சுகாசனம் முதலிய நிலைகளில் அமர்ந்து, மனத்தை ஒருமுகப்படுத்தி, அன்பு செலுத்தி இறைவனை வழிபடுதல்.

- ஆசிரியர்.

# வேதம் தமிழ் செய்த மாறன் - நம்மாழ்வார்

பொ. ராமநாதபிள்ளை, பி.ஏ., பி.எட்.,
செயல் அலுவலர், கரூர்

உயர்வற உயர் நலம் உடையவனான எம்பெருமானால் மயர்வற மதி நலம் அருளப் பெற்ற ஆழ்வார்களால் அருளிச் செய்யப்பட்ட நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலே பதினோறு ஆழ்வார்கள் அருளிச் செய்த பாசுரங்களை திருமொழி என்றும், நம்மாழ்வார் அருளிய பாசுரங்களுக்கு திருவாய்மொழி என்றும், பிரபந்தத்திலே பேசப்படுகிறது. நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழியினை வேதம் தமிழ் செய்த மாறன் என்று கூறுதலால் திருவாய்மொழி வேதத்தின் தமிழாக்கம் என்று சொல்லாம். அப்பேறப்பட்ட உன்னதமான ஈடு இணையற்ற ஒப்புமையில்லாத உயர்ந்த ஒரு பிரபந்தத்தை ஆன்மாக்கள் உய்வதற்கு நம்மாழ்வார் அருளிச் செய்திருப்பது உண்மையிலேயே நம் எல்லோருக்கும் கிடைத்த அரிய பெரிய பொக்கிஷமாகும்.

இதனை ஸ்ரீ மணவாள மாமுனிகள்

''எரார் வைகாசி விசாகத்தின் ஏற்றத்தைப்
பாரோர் அறியப் பகர்கின்றேன் -- சீராகும்
வேதம் தமிழ்செய்த மெய்யன் எழில்குருகை
நாதன் அவதரித்த நாள்''

என்றும்,



''உண்டோ வைகாசி விசாகத்துக்
கொப்பொருநாள்
உண்டோ சடகோபற் கொப்பொருவர்---
உண்டோ
திருவாய்மொழிக் கொப்பு தென்குருகைக்
குண்டோ
ஒருபார்தனிலொக்கும் ஊர்''

என்றும் பாராட்டினார்.

நம்மாழ்வார் அவதரித்ததால் 108 திவ்ய தேசங்களில் திலகமாக விளங்குவது ஆழ்வார் திருநகரி. இயற்கையில் ஞானம் பெற்றவராக நம்மாழ்வார் திகழ்ந்தார். பெருமாளுடைய குண அலகு, செயல் அலகு, வடிவழகுகளில் ஆழ்ந்து கிடந்தவர்கள் ஆழ்வார்கள் என்பது வைஷ்ணவக் கொள்கை. ஸ்ரீ ரெங்கநாதரால் ''நம் ஆழ்வார்'' என்று அபிமானிக்கப் பெற்றதால் அவருக்கு நம்மாழ்வார் என்ற திருப்பெயர் ஏற்பட்டது. திருக்குருங்குடி ஸ்ரீ வைஷ்ணவ நம்பியே. நம்மாழ்வாராக அவதாரம் செய்தார் என்ற மரபும் உண்டு. ''ஞானவெள்ளப் பெருக்கு'' என்று திருவாய்மொழியைக் கூறலாம்.

''தேவுமற்றறியேன் குருகூர் நம்பி
பாவின் இன்னிசைபாடித்திரிவேனே''

என்றார் இவரது சீடரான மதுரகவி ஆழ்வார். வேதங்களில் எளிதில் காணமுடியாமல் மறைந்து கிடந்த தலைசிறந்த தத்துவங்களை எல்லாம் தெளிவாக விளக்கி வேதங்களின் மகிமையை எங்கும் பிரகாசிக்கச் செய்வது என்பது கம்பர் கருத்து. ''யானாய்த் தன்னைத்தான் பாடி'' என்று கூறுவதால் இவர் வார்த்தை வேதம் என்றே கூறுவர். நம்மாழ்வாரை, மூவகை தத்துவமான சித்து, அசித்து, ஈசன் என்ற அடிப்படையில் தத்துவத்தின் முடிவு கண்ட சதுர்மறை புரோகிதன் என்று வில்லிபுத்தூரார் பாராட்டுகிறார். சித்து என்பது அறிவுரை பொருள். இதனை ஜீவாத்மா என்று கூறலாம். அசித்து என்பது அறிவற்ற பொருள். இந்த இரு வகைப் பொருளையும் நடத்திச் செல்பவன் பரமாத்மா என்கிறோம். உயிர் உடம்பிற்குள் இருந்து உடலைத் தாங்கி இயங்கச் செய்வதைப் போல பரமாத்மாவும், இயற்கைக்கும் ஜீவாத்மாவிற்கும் உள்ளே நின்று இவற்றைத் தாங்கி இயக்குகிறான் என்பது தான் ''விசிஷ்டாத்வைத சித்தாந்தம்''.

இதனை நம்மாழ்வார்

''திடவிசும்பு எரிவளி நீர் நிலம் இவை மிசை
படர்பொருள் முழுவதுமாய் அயையை
தொறும்,
உடன்மிசைஉயிரெனக் கரந்தெங்கும்
பரந்துளன்
சுடர்மிகு சுருதியுள் இவையுண்ட சுரனே''

என்று அற்புதமாகப் பாடியுள்ளார்.

திருப்புளிக்கு வந்து எல்லா எம்பெருமான்களும் என்னைப்பாடு, என்னைப்பாடு என்று இவரிடம் வேண்டி இவரது திருவாயால் பாசுரம் பெற்றனர் என்ற வரலாறும் உண்டு. திருப்புளிய மரத்தின் கீழ் மண்டபத்தில் 108 திவ்ய தேசபெருமான்களில் மூர்த்திகள் சேவை சாதிப்பதை இன்றும் காணலாம். விஷ்ணு என்றால் ''எங்கும் வியாபித்துள்ளவர்'' என்று பொருள். பெருமாளின் தொடர்பு பெறாத அண்டப்பகுதி இருக்க முடியாது. இதை உணர்ந்தவரே உண்மையான ஸ்ரீவைஷ்ணவர்.

திருமால் அடியார்களுக்கு தொண்டு செய்வதை நம்மாழ்வார் வலியுறுத்துகிறார். திருமால் அடியாரின் பெருமையை பல பாசுரங்களில் அற்புதமாகப் பாடியுள்ளார்.

''பங்கயக் கண்ணனைப் பயிலும்
திருவுடையார்
எம்மை ஆளும் பரமரே''

என்று பெருமையுடன் பாடுகிறார்.

நம்மாழ்வார் தம்மை நாயகியாக பாவித்து, புருஷோத்தமனான தலைவனிடம் தன் ஆற்றாமையை எடுத்துரைக்க வேண்டி இவர் பறவையை தூது அனுப்பும் பாங்கு சிந்தித்து மகிழத்தக்கது. பறவைகள் ஆச்சாரியார்களே என்பது உட்கருத்து. ''அஞ்சிறையை மடநாராய், எங்கானலகங்கழிவாய், பொன்னுல காளீரோ'' என்ற பதிகங்களில் பறவைகளை இவர் இறைவனிடம் தூதாக அனுப்புவார். தாய் தன் மகள் நிலையை திருவரங்கனுக்கு உணர்த்துவதாக அமையும் பாடல் மிகவும் அற்புதமானதாகும்.

''கங்குலும் பகலும் கண்துயில அறியாள்
கண்ணநீர் கைகளால் இறைக்கும்,
சங்குசக்கரங்கள் என்று கை கூப்பும்
தாமரைக்கண் என்றே தளரும்,
எங்ஙனே தரிக்கேன் உன்னைவிட்டு
என்றும்
இருநிலம் கைதுழா விருக்கும்,
செங்கயல் பாய்நீர் திருவரங்கத்தாய் !
இவள்திறத்து என் செய்கின்றாயே !

இறுதியாக பகவானே ஆழ்வாராக அவதரித்து, பிற ஆழ்வார்களை தமக்கு அவயகங்களாகக் கொண்டு ஞானத்தின் சிகரமாகத் திகழ்ந்து, நான்கு வேதங்களின், சாரமாக நான்கு பிரபந்தங்களையும் அருளிச்செய்து உலகை வாழ்வித்த ரெங்கநாதரால் நம்மாழ்வார் என்று அனுமானிக்கப் பெற்ற ''வேதம் தமிழ் செய்த மாறன்'' என்பது திருமால் அடியார்களின் முடிந்த முடிவாகும்.

# இம்மாதப் பாராயணப் பாசுரம்
# திருப்பல்லாண்டு



வாழாட்பட்டு நின்றீருள்ளீரேல் வந்து
மண்ணும் மணமும் கொண்மின்:
கூழாட்பட்டு நின்றீர்களை எங்கள்
குழுவினில் புகுதலொட்டோம்:
ஏழாட்காலும் பழிப்பிலோம் நாங்கள்
இராக்கதர் வாழ் இலங்கை
பாழாளாகப் படை பொருதானுக்குப்
பல்லாண்டு கூறுதுமே.

ஏடுநிலத்தில் இடுவதன் முன்னம் வந்து
எங்கள் குழாம் புகுந்து
கூடு மனமுடையீர்கள்: வரம்பொழி
வந்து ஒல்லைக் கூடுமினோ:
நாடும் நகரமும் நன்கறிய நமோ
நாராயணாய வென்று
பாடு மனமுடைப் பத்தருள்ளீர்: வந்து
பல்லாண்டு கூறுமினே.



# பெரிய புராணம் போற்றும் பெண்மை

பேராசிரியர் தி.இராசகோபாலன்
முதல்வர், தாகூர் கலை அறிவியல் கல்லூரி, சென்னை -14

தமிழில் பதினெட்டுப் புராணங்கள் உள்ளன. அவற்றுள் தலைசிறந்தது திருத்தொண்டர் புராணம் என்பதால், அதனைப் 'பெரியபுராணம்' என்றழைக்கின்றனர் சான்றோர். பெரியபுராணம் சைவத்தின் பெருமையை எடுத்து நிறுத்துவதற்காக எழுதப் பெற்ற புராணம் என்றாலும், சேக்கிழார் அப்புராணத்தின் பின்புலமாகச் சமூகவியலையும் மானுடவியலையும் சித்தரித்திருக்கின்றார். மேலும், மானுடத்தின் ஒரு பாதியாகத் திகழும் பெண்மையின் பெருமையை பொலிவுறவே பேசியிருக்கின்றார். இடைக்காலத்தில் மலினப்படுத்தப்பட்ட பெண்மை, சேக்கிழாரால் எடுத்து நிறுத்தப் பெற்றிருக்கிறது.

நாயன்மார்கள் சிவனை அன்றி வேறெவரையும் வணங்காதவர்கள். அம்பிகையைக் கூட, சிவபெருமானின் ஒரு பகுதியாகவே பார்ப்பர். ஆனால், நாயன்மார்கள் வழிவந்த சேக்கிழார் பெண்மையைப் போற்றுபவர் என்ற காரணத்தால், அம்பிகையை ஒரு சக்தியாகவே பார்க்கின்றார். மேலும், அன்னை காமாட்சியை, ''எம்பிராட்டி இவ்வேழ் உலகும் ஈன்றாள்'' (திருமலைச்சிறப்பு-பாடல்34) என்று பாடுகிறார். பெண்மையை ஆராதிக்க வேண்டும் என்ற எண்ணத்தால், அன்னை காமாட்சியை இவ்வேழ் உலகும் படைத்தவளாகவே படைத்துவிடுகிறார் சேக்கிழார்பெருமான் அவர்கள்.

ஆடவர்களில் சிறந்தவர்களைக் குறிப்பதற்குத் தமிழில் 'மானி' என்றொரு சொல் உண்டு. ஆனால், சேக்கிழார் மங்கையர்க்கரசியாரின் மாண்பைக் காட்டுவதற்கு, அவரை 'மானி' என்கிறார். சேக்கிழார் காலத்திற்கு முன்பு ஆடவர்களில் சிறந்தவர்களைக் குறிப்பதற்குப் பயன்படுத்தப் பெற்ற அச்சொல்லை, பெண்களிலே சிறந்தவர்களுக்கும் அச்சொல்லைப் பயன்படுத்தினால் என்னவென்று ஒரு புரட்சியைச் செய்கிறார் சேக்கிழார். அது போலவே 'தபோதினி' என்றொரு புதுச்சொல்லையும் உருவாக்குகிறார் தெய்வச் சேக்கிழார். தவத்தில் சிறந்தவரை 'தபோதனர்' என்றழைப்பது சைவமரபு. சேக்கிழாருக்கு முன்பு 'தபோதினி' என்ற சொல்லாட்சி கிடையாது. ஆனால், சேக்கிழார் ஒரு பெண்ணும் ஆணைப்போலவே, தவத்தில் சிறந்து விளங்க முடியும் என்பதை எடுத்துக் காட்டுவதற்காக, ''நின்ற தபோதினியாரும்நின்மலன் பேரருள் நினைந்து'' எனத் திலகவதியாரைப் பாராட்டுவார். பெண்ணைத் துதிக்க நினைத்த சேக்கிழார், மானியைப் போலவே, 'தபோதினி' என்ற சொல்லாட்சியையும் உருவாக்குகிறார். சேக்கிழார் காலத்திற்கு முன்பு சிவதீட்சைசெய்யும் உரிமை ஆடவர்களுக்கு மட்டுமே உண்டு. ஆனால், சேக்கிழார் சமணத்திலிருந்து சைவத்திற்குத் திரும்பும் தம் தம்பிக்குத் திலகவதியார் மூலம் சிவதீட்சைகொடுக்கிறார். 'திருக்கயிலைக் குன்றுடையார் திருநீற்றை அஞ்செழுத்தை ஓதிக் கொடுத்தார்'' என்று சொல்கிறது பெரியபுராணம். இதனைப் பெரிய புராணம்



சேக்கிழார்

பெண்மைக்குத் தந்த மிகப்பெரிய ஏற்றம் எனலாம்.

தமிழ்நாட்டுப் பெண்கள் உடலாலும் உயர்ந்தவர்கள். உள்ளத்தாலும் உயர்ந்தவர்கள் என்பது பெரியபுராணத்தின் மதிப்பீடு. அறிவால் உழைப்பவர்களைப் போலவே உடலால் உழைப்பவர்களும் உயர்ந்தவர்கள்தான். ஆனால் காலப்போக்கில் உடலால் உழைப்பவர்கள் தாழ்வாகக் கருதப்படுகிறார்கள். கொத்துவேலை செய்யும் ஆடவனுக்குக் கொடுக்கப்படும் கூலி, அதே வேலையைச் செய்யும் பெண்ணுக்குக் கொடுக்கப்படுவதில்லை. அவள் 'சித்தாளு' என்று குறைவாக மதிக்கப்பட்டாள். ஆனால், இக்கொடுமையை ஒழிக்க நினைத்த சேக்கிழார், திருவாரூர் திருநகரத்தில் நாற்றுநடுகிற பெண்களுக்கும் மாட்சியுண்டு என்றார். 'மாதர் நாறு பறிப்பவர் மாட்சியும்' என்பது பெரியபுராணம் வரியாகும்.

பிற்காலத்தில் மகாகவி பாரதியார் 'கைவருந்தி உழைப்பவர் தெய்வம்' என்று பாடுவதற்கும், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, 'நாடிப்புலங்கள் உழுவார் கரமும் ' என்று பாடுவதற்கும், அதற்கும் பின்னர் கார்ல் மார்க்ஸ் 'உழைக்கும் வர்க்கம் பெருந் தன்மையான வர்க்கம்' என்று பேசுவதற்கும், 'களையெடுக்கின்றாள்-அதோ கட்டழகுடையாள்' என்று பாவேந்தர் பாரதிதாசன் பாடுவதற்கும் அந்நாளில் அடியெடுத்துக் கொடுத்தவர் சேக்கிழாரே எனலாம்.

பெண்கள் உடலாலும் உள்ளத்தாலும் புனிதமானவர்கள் எனக் காட்டுவதற்குப் பெரிய புராணம் தெய்வத்தையே சாட்சியாக அழைக்கிறது. திருநீலநக்கர் எனும் நாயனார் திருச்சாத்தமங்கையில் வாழ்ந்தவர். அவர்தம் மனைவியோடு திருவயந்திபுரம் திருக்கோயிலிலுள்ள சிவனை வழிபட்டு நிற்கின்றனர். அந்நேரத்தில் மூலவரின் மேல் ஒரு சிலந்தி விழவே, திருநீலநக்கரின் மனைவியார், 'ஒரு குழந்தையின் மேல் பூச்சி விழுந்தால், தாய் எவ்வாறு துடிதுடித்து வாயால் ஊதுவாளோ அது போன்று' மூலவரின் மேல் வாயால் ஊதிவிட்டாள். இதைப் பார்த்து திடுக்கிட்ட திருநீலநக்கர் 'ஏதோ அபச்சாரம் நேர்ந்து விட்டது, புனிதம் கெட்டுவிட்டது' என்று சொல்லி, அதற்குத் தண்டனையாகத் தம் மனைவியை அங்கேயே விட்டுவிட்டு, தாம் மட்டும் வீட்டிற்குப் போய்விட்டார். ''இளங்குழவியில் விழும் சிலம்பி ஒழிந்து நீங்கிட, ஊதிமுன் துமிப்பவர்போல'' என்பது பெரிய்புராணம்.

வீட்டில் சென்று படுத்த திருநீலநக்கர் கனவில், சிவபெருமான் தோன்றி, தம்மேனி முழுமையும் காட்டினார். அதில் ஒரு குறிப்பிட்ட இடத்தைத் தவிர மற்ற இடமெல்லாம் கொப்புளங்கள் நிறைந்திருந்தன. அயவந்திநாதர் ''பார்த்தாயா ! உம்மனைவி ஊதித் துமிந்த இடத்தில்தான் கொப்புளங்கள் இல்லை; ஏனென்றால், அந்த இடம்தான் அன்பால் ஊதப்பட்ட இடம். எனவே அங்கு கொப்புளங்கள் இல்லை'' எனப் பெருமானே நேரில் வந்து பெண்ணின் பெருமையையும் மகத்துவத்தையும் எடுத்துக் காட்டுவதாகச் சேக்கிழார் சித்தரிக்கின்றார். மனிதர்கள் சொன்னால் கேட்காதவர்கள் கூட, தெய்வம் சொன்னால் கேட்கலாமல்லவா! எனவே தெய்வத்தையே சாட்சிக்கு அழைக்கிறார் சேக்கிழார்.

ஒரு பெண்ணின் ஆற்றல் அந்தப் பெண்ணுக்கே தெரியாமல் இருந்த காலம் ஒன்று உண்டு. பெண்களுக்கே 'தாங்கள் பலகீன மானவர்கள்தாம்' என்ற எண்ணமும் ஒரு காலத்தில் இருந்தது. அந்தப் பலகீனத்தைப் போக்க, சேக்கிழார் ஓர் அற்புதமான உத்தியைக் கையாளுகிறார். காரைக்காலம்மையார் திருக்கயிலைக் காட்சியைக் காணவேண்டு மென்று தலையாலே நடந்து வருகிறார். கயிலை மலை நோக்கி வருகின்ற அம்மையாரைப் பார்த்து, சிவபெருமான் பக்கத்தில் இருந்த உமாதேவி, ''அன்பே வடிவமாக வரும் இப்பெண் யார்?''எனக் கேட்கின்றார். அதற்குச் சிவபெருமான், ''வருமிவள் எம்மைப் பேணும் அம்மைகாண்'' என்றார். தமக்கென்று தாயும் தகப்பனும் இல்லாத சிவபெருமான், பிறப்பும் இறப்புமில்லா சிவன், போக்கும் வரவுமில்லாப் புண்ணியன், காரைக்காலம்மையாரைப் பார்த்து, ''எம்மைப் பேணும் தாயே' என்கிறாரென்றால், ஒரு பெண்ணின் ஆற்றலை இன்னொரு பெண்ணுக்கு ஓர் ஆணே எடுத்துச் சொல்கின்ற உத்தியைச் சேக்கிழார் கையாளுகிறார் என்று தானே சொல்ல வேண்டும்.

உமாதேவியார் யார் என்று கேட்கிறார் என்றால், உமையம்மைக்குத் தெரியவில்லை என்பது பொருளன்று. ஒரு பெண்ணின் ஆற்றல் இன்னொரு பெண்ணுக்குத் தெரியவில்லை என்பதன் குறியீடு என்றே அதனைக் கொளல் வேண்டும். பெண்நலம் என்பது பெண்களால் மட்டும் போற்றிப் பாதுகாக்கக் கூடியது அன்று; ஆண்களும் பேணிப் பாதுகாத்தால் தான் உண்டு. பெண்களுக்கு வரும் தீங்கு பெரும்பாலும் ஆண்களால் என்பதால், சேக்கிழார் பூம்பாவை வரலாற்றில் ஓர் அபூர்வமான நிகழ்ச்சியைப் படைத்துக் காட்டுகிறார். பூம்பாவை என்றொரு

பெண்குழந்தையைச் சிவநேயஞ்செட்டியார் திருஞானசம்பந்தருக்காகவே வளர்த்து, ஆளாக்கி வருகிறார். ஆனால், எதிர்பாராது அப்பெண் குழந்தை பாம்பு தீண்டி மாண்டுவிடவே, சிவநேயஞ்செட்டியார் அப்பெண்ணின் சாம்பலைக் குடத்தில் வைத்து திருஞானசம்பந்தருக்காகக் காத்து வருகிறார். திருவொற்றியூரிலிருந்து திருமயிலாப்பூர் வந்த திருஞானசம்பந்தர் முன் அச்சாம்பல் அடங்கிய குடத்தை வைக்கிறார் செட்டியார்.

திருஞானசம்பந்தர் கபாலீச்சரத்தானை எண்ணிப் பதிகம் பாடவே, அக்குடத்திலிருந்து முழுவளர்ச்சி பெற்ற பூம்பாவை உயிரோடு எழுந்து வருகிறாள். சிவநேயஞ்செட்டியார் அப்பெண் ஞானசம்பந்தருக்கென்று நேர்ந்து விட்டபடியால், ''ஞானசம்பந்தரே மணந்து கொள்ள வேண்டும்'' என்று வற்புறுத்தினார். ஆனால், திருஞானசம்பந்தர் சிவநேயஞ் செட்டியாரை நோக்கி, ''நீங்கள் பெற்ற பெண் எப்பொழுதோ பாம்பு கடித்து இறந்து விட்டாள்; இப்பொழுதிருக்கும் பூம்பாவை யான் பெற்ற பெண். எனவே நீங்கள் கூறும் வார்த்தை தகாது'' என்றார். நான்முகன் தாம்படைத்த பெண் திலோத்தமையின் அழகில் மயங்கி, தம்முடைய வயதையும் மறந்து அவளையே மணந்து, தேடிக் கொண்ட அபகீர்த்தியை நாடறியும். திருஞான சம்பந்தர் பெண்நலத்தையும் பெண்ணறத்தையும் பேணியதால், அங்குப் பெண்மையும் கௌரவப் பட்டது. ஆண்மையும் கௌரவப்பட்டது.

நம்முடைய கலை இலக்கிய வடிவங்களிலும், தகவல் தொடர்பு சாதனங்களிலும் பெண் என்பவள் அழகுப் பொருளாகவே காட்டப்படுகிறாள். ஆனால், ஒரு பெண்ணிற்கு ஆணை விஞ்சக் கூடிய அளவிற்கு ஆற்றலும் உண்டு என்பதைச் சேக்கிழார் பெரிய புராணத்தில் சாதித்துக் காட்டுகிறார். சோழ நாட்டில் சுபதேவர் என்னும் மன்னருக்குக் கமலவதி என்றொரு மனைவி. அக்கமலவதி கருவுயிர்க்கும் நேரம் வந்தது. அப்பொழுது அரண்மனைக்கு வந்த நிமித்தகர் ஒருவர் 'இன்னும் ஒரு நாழிகை கழித்துக் குழந்தை பிறந்தால், அக்குழந்தை குவலயத்தையே ஆளும்' என்றார். அதனைச் செவிமடுத்த கமலவதி தமது கால்களை மேலே தூக்கிக் கட்டச் செய்து, ஒரு நாழிகைக் கழித்து எதிர்காலத்தில் 72 கோயில்களைக் கட்டக் கூடிய கோச்செங்கட்சோழன் என்ற குழந்தையைப் பெற்றெடுத்தாள் என்பது வரலாறு. இந்நிகழ்ச்சி யிலிருந்து ஒரு தாயின் மனவலிமை தெரிகிறது. ஒரு பெண்ணின் வைராக்கியம் வெளிப்படுகிறது. ஆற்றலில் ஓர் ஆணுக்கு எந்த விதத்திலும் பெண் குறைவானவள் அல்லள் என்பதும் `புலனாகிறது. பெண்மைக்குச் சேக்கிழார்தீட்டிய இலக்கிய ஓவியமிது.

பெரியபுராணம் பெண்மைக்குப் பெருமை சேர்ப்பதோடு, அப்பெண்மைக்குக் குந்தகம் ஏற்படும்பொழுது, அதைப் பிறருக்குப் புலனாகாமல் மறைக்கவும் செய்கிறது. ''அற்றம் மறைக்கும் பெருமை'' என்கிறது திருக்குறள். சுந்தரமூர்த்தி நாயனாருக்கு மணம் வந்த புத்தூரில் வாழ்ந்த சடங்கவி சிவாச்சாரியாரின் மகளை மணம் பேசி முடிவு செய்கிறார்கள். ஆனால், அத்திருமணத்தை நடக்கவிடாமல், சிவபெருமான் தடுத்தாள்கிறார். இதில் எண்ணிப் பார்க்கவேண்டியது என்னவென்றால், மிகச் சிறப்பாக இத்திருமணத்தை வருணிக்கின்ற சேக்கிழார் மணப்பெண்ணின் பெயரை ஏன் குறிப்பிடவில்லை. புத்தூர் சடங்கவி சிவாச்சாரியாரின் மகள் 'பெண்களில் உயர நோற்றாள் ; செந்திரு வனைய கன்னி' என்கிறார். பெயரைஏன் குறிப்பிடவில்லை?

அவளுடைய பெயரைத் தேடிக் கண்டு பிடிப்பது சேக்கிழாருக்கு அரிய செயலா? சுந்தரமூர்த்தி நாயனாரின் தந்தை சடையனார் என்றும் தாயார் இசைஞானியார் என்றும் தேடிப் பிடித்தவர் சேக்கிழார். கண்ணப்பரின் தந்தை நாகன் என்றும், தாய் தத்தை என்றும் கண்டு சொன்னவர் சேக்கிழார். அப்படிப் பட்டவருக்குப் புத்தூர் சடங்கவியாரின் மகள் பெயர் தெரியாதா? பின் ஏன் சொல்லவில்லை சேக்கிழார்?

நம்மூரில் குடும்பத்தைக் கெடுத்த ஒரு பெண்ணைச் சுட்டும்பொழுதெல்லாம் கைகேயி என்றோ, கூனி என்றோ கூறுகின்றனர். தகாத ஆசைகொண்டு அவமானப்பட்ட ஒரு பெண்ணைச் சொல்லும் பொழுதெல்லாம், 'அவளா சூர்ப்பணகை ஆயிற்றே' என்கின்றனர், அதுபோல, திருமண நாளன்று வாழாமல் போன ஒரு பெண்ணைப் பேசும் பொழுதெல்லாம், சடங்கவி சிவாச்சாரியாரின் மகள் பெயரைச் சொல்லி, 'அவளாயிற்றே= எனலாம். அப்படியொரு அவப்பெயர் அந்தப் பெயருக்கு ஏற்பட்டுவிடக் கூடாதே என்று தான், சேக்கிழார் அப்பெயரைச் சொல்லாமல் விட்டிருக்க வேண்டும். சேக்கிழார் உடன்பாட்டிலும் பெண்மையைப் போற்றுபவர். எதிர்மறையிலும் பெண்மையைப் பாராட்டுபவர்.

பெரியபுராணம் பெண்மையின் பரிமாணங்கள் அனைத்தையும் வெளிக் கொணர்ந்த ஒரு காப்பியம் எனலாம்.




குறைதீர்க்கும் குணசீலன்
மனக்கவலை தீர்க்கும் மாமருந்து

# ஸ்ரீ பிரஸன்ன வேங்கடாசலபதி ஸ்வாமி

**1. காவேரிதீரம்**

அகஸ்திய முனிவரின் கமண்டலத்திலிருந்து அன்னை காவேரி நதியாக அகண்ட காவேரியாக பூரணப் பொலிவுடன் ஆடி வருகிறாள். கொள்ளிடம் காவேரியென இரு பிரிவாக பிரிய இருக்கும் இடத்துக்கு ஒரு கிலோமீட்டர் தூரத்திலே மகரிஷி ஒருவர் ஆஸ்ரமம் அமைத்துக் கடுந்தவம் செய்து வருகிறார்.

மலை மேலே இருக்கும் திருப்பதி வேங்கடவனை பகீரதன் தவம் செய்து ஆகாசகங்கையை மண்ணுக்கு அழைத்து வந்தது போல, வைகுண்ட வாசனை, பீதாம்பரதாரியை உலகைக் காக்கும் ஸ்ரீய: பதியை தன் தவ வலிமையால் மண்ணுலகத்திற்கு, அதுவும் காவேரி கரைக்கு அழைத்துவரும் கடுந்தவமாக அது இருக்கிறது.

மானுட நெஞ்சத்து வலிமை திரிசங்கு மகாராஜனுக்காக ஒரு புதிய சொர்க்கத்தையே சிருஷ்டித்தது. இதோ குணசீல மகரிஷியின் தவ ஆற்றல் வைகுண்டவாசனை பொன்னி நதியின் சகஸ்ராக்க பீடத்தில் ஆர்பவிக்கச் செய்கிறது. இந்த வரலாறே குணசீல மகாமித்யம் ஆகும்.

**2. குணசீல மகரிஷி**

ஸ்ரீதால்பிய முனிவரின் ஆத்மார்த்த சீடர் குணசீலர். சகல நற்குணங்களும், மன ஆற்றலும், திட புத்தியும், வைராக்யமும் படைத்தவர் குணசீலர். குரு கைங்கர்ய சிகாமணியாக குருவின் பாத சேவை செய்வதில் தன்னை பூரணமாக ஈடுபடுத்திக் கொண்டவர்.

ஸ்ரீதால்பிய முனிவர் தன்னை வந்தடைந்து, நிழல்போல் தன்னை தொடரும் குணசீலருக்குத் தன் தவ வலிமையால் ஞான அமுது வழங்கி, ஆனந்த பரத்தை அடையும் சாதனா மார்க்கத்தையும் உபதேசித்தருளினார்.

திருவேங்கட மாமலையில் ஸ்ரீய: பதியான வேங்கடவனை குணசீலர் தரிசித்தார். எம்பெருமான் சௌந்தர்யத்திலே மகரிஷி குணசீலரின் மனம் ஆழ்ந்தது. ஒருகணம் கூட இனி தாம் தனித்து வாழ இயலாது என்ற மனவேகம் அவருக்கு ஏற்பட்டது.

தவித்தது உள்ளம், தடுமாறியது சிந்தை, எம்பெருமானே திருவேங்கடவா, என் நெஞ்சம் நிறைந்த நிறையமுதே, ஆனந்தத்தேனே, அடியேனுடன் என்றென்றும், எனது ஆஸ்ரமத்திற்கு எழுந்தருளி உடனிருக்க வேண்டுமெனப் பிரார்த்தித்தார்.

அன்புக்கு ஆட்படும் அண்ணல் அல்லவா ஆண்டவன். ஆண்டவன் உள்ளத்திலே ஒரு சங்கற்பம் உதித்தது. குணசீலரின் பிரார்த்தனைக்குக் கனிந்தும், அதே சமயம் காவேரி வேங்கடனாகவும் தாம் எழுந்தருள வேண்டுமென்று கருதியிருக்க வேண்டும், வேங்கடமுடைய வள்ளல் மதுரவாய் திறந்து அருள் பொழிந்தார். திருவேங்கட மாமலையில் அர்ச்சாவதாரமாக இருந்து திருமணக் கடனை கட்டிக்கொண்டிருப்பதாகவும், இங்கிருந்து கடன் தீரும்வரை தாம் புறப்பட்டுவர இயலாதென்றும் ஆனால் ஒரு உபாயம் உரைப்பதாகவும் அறிவித்தார்.

அகண்ட காவேரிக் கரையில் ஆஸ்ரமம் அமைத்து, குணசீல மகரிஷி தவம் புரிந்து வரவேண்டுமென்றும் வைகுண்டத்திலிருந்தே ஸ்ரீ வாசுதேவன் ஸ்ரீ லக்ஷ்மியுடன் பிரசன்ன வேங்கடேசனாக தான் உருதாங்கி உமது ஆஸ்ரமத்திற்கு எழுந்தருள்வார். அதற்கான முயற்சியை மேற்கொள்ளுமாறு குணசீல மகரிஷிக்கு திருமலை வேங்கடவன் திருவருள் பாலித்தார்.

அகண்ட காவேரி தீரத்தில் குணசீல மகரிஷி ஆஸ்ரமம் அமைத்து பிரசன்ன வேங்கடேசனை,

ஸ்ரீனிவாசனை தன் உபாசனா மூர்த்தமாக திவ்ய வடிவோடு எழுந்தருள கடும் தவம் செய்து வந்தார்.

பல ஆண்டுகளுக்குப்பிறகு கிருதயுகம் புரட்டாசி மாதம் சனிக்கிழமை சிரவண நட்சத்திரம் கூடிய சுபதினத்தில் தனூர் லக்னத்தில் சந்திரனுடன் குரு சேர்ந்திருக்கும் போது ஒரு திவ்ய மங்கள சொரூபத்தோடு குணசீலர் ஆஸ்ரமத்தில் எம்பெருமான் ஆர்பவித்தார்.

### 3. ஸ்ரீ பிரசன்ன வேங்கடேசன்

ஸ்ரீய் பதி எழுந்தருளியுள்ள திவ்விய தேசங்கள் 108, வைகுண்டமும், திருப்பாற்கடலும் நீங்கலாக 106 ஸ்தலங்களில் அர்ச்சாவதாரமாக எம்பெருமான் எழுந்தருளியுள்ள பதிகளாகும்.

ஆழ்வார் பெருமக்களால் மங்களாசாசனம் செய்யப் பெற்ற சில திருத்தலங்கள் திவ்ய தேசங்களில் சேரவில்லை, விடுபட்டவை புராணத் திருத்தலங்கள் என்றும், அபிமானத் திருத்தலங்கள் என்றும் பேசப்பெறும்.

குணசீலம் பிரசன்ன வேங்கடேசப்பெருமாள் திருத்தலம் அபிமானத் திருத்தலமாக விளங்குகின்றது. இறைவனே ''தருமகந்தது எவ்வுருவம் அவ்வுருவம் தானே'' என்று பொய்கை ஆழ்வார் வாக்கினையொப்ப குணசீல மகரிஷியின் தவச்செல்வமாக ''ஸ்வயம்'' மூர்த்தமாகத் திகழ்ந்து வருகிறார்.



வான்கருணை மாமழையாய் பொழிவது போல, தன் தவத்திற்கிசைந்து வைகுந்தநாதனே வடவேங்கடவன் தோற்றத்தின் ''ஸ்வயம்'' மூர்த்தமாக தன் ஆஸ்ரமத்தில் ஆர்பவித்த இன்பதிளைப்பில் குணசீல மகரிஷி மூன்று யுகங்கள் பிரசன்ன வேங்கடவனை, ஸ்ரீனிவாசனை, வைகுண்ட நாதனை தன் ஆஸ்ரமத்தில் வைத்துப் பூஜித்து ஆராதித்து வந்தார்.

### 4. குணசீல மகரிஷி கேட்ட வரம்

த்வாபரயுகத்தில் குணசீல மகரிஷியின் குருவான ஸ்ரீதால்பிய முனிவருக்கு பத்ரிகாசிரமத்தில் தங்கி தவம் செய்ய வேண்டுமென்ற உள்ளக்கிளர்ச்சி எழுந்தது. தனது ஆத்மார்த்த சீடன் குணசீல மகரிஷியை விட்டுச் செல்கிறோமே என்ற எண்ணம் எழுந்தது ஸ்ரீதால்பிய மகரிஷிக்கு.

இந்த எண்ணத்தின் தாக்கல் குணசீல மகரிஷியின் மனத்தில் எதிரொலித்தது. தான் வேண்டித் தவங்கிடந்து நீங்காத செல்வமாய் அடைந்த பிரசன்ன வேங்கடேசனை தனியே விடுவதா? தன்னை இந்நிலைக்கு உயர்த்திய குரு பெருமானாகிய ஸ்ரீதால்பிய முனிவரை தனியே விடுவதா என்று நெஞ்சத்து நிரடல் ஏற்பட்டது.

இவ்வாறு குணசீல மகரிஷிக்கு ஒரு தர்ம சங்கடம் ஏற்படுவானேன்? எம்பெருமான் ஸ்ரீனிவாசன் தன்னுடைய திருவிளையாடல் அடுத்த அத்தியாயத்தை தொடங்கவே இப்படி ஒரு சூழ்நிலையை குணசீல மகரிஷிக்கு ஏற்படுத்தியிருக்க வேண்டும். யார் அறிவார் இறைவன் திருவுளத்து நெகிழ்வை.

குணசீல மகரிஷி தன் ஆராதனா மூர்த்தமாக, தவச்செல்வமாக விளங்கும் பிரசன்ன வேங்கடேசனையே தன் சங்கடத்தைத் தீர்க்குமாறு பிரார்த்தனை செய்தார்.

குணசீலரே பத்திரிகாஸ்ரமத்திலும் நாமே இருக்கிறோம் குருவின் சேவை தடைபட வேண்டாம். தல்பியருடன் பத்திரிகாசிரமம் சென்று வருக எம்மைத் தனியே விட்டுச் செல்கிறோமே என்று வருந்தற்க. குரு கைங்கர்ய மணியாய் குணசீலர் என்றும் விளங்கவேண்டுமென்பது எமது விருப்பம்

என்று திருவாய் மலர்ந்தருளினார்.

அப்போது குணசீலர் எம்பெருமானிடம் தன் உள்ளக்கிடக்கையை விவரித்தார். எனக்கு பிரசன்னமான ஸ்ரீவேங்கடவா ஸ்ரீனிவாசா தங்கள் கட்டளைப்படி நடக்கிறேன். தாங்கள் எழுந்தருளியுள்ள இந்த ஸ்தலம் இனி என் பெயரால் விளங்க வேண்டும். தங்களை நாடிவந்து அடிபணிவோர் முன்வினைப்பதிவுகள் அனைத்தும் நீங்கவேண்டும் சித்தப் பிரமையுடையவர்கள் இங்கு வந்தால் தெளிவு அடையவேண்டும். தீராத நோய்கள் தீர வேண்டும். நின் அடியார் நின்னிடம் கேட்டது கிடைக்க வேண்டும். அடியார் நினைப்பது நடக்க வேண்டும். இந்த ஸ்தலம் பிரார்த்தனை ஸ்தலமாக என்றும் விளங்க வேண்டும். தென் திருப்பதி என்றும் இந்த ஸ்தலத்தை மக்கள் போற்றி மகிழ வேண்டும். உன்முன் தவமிருப்போர் குணசீலராகி எல்லா நலனும் பெற்று இன்புற வேண்டுமென்று பிரார்த்தித்தார்.

மகரிஷியின் பேருள்ளத்தை நுட்பத்தை அறிந்த எம்பெருமான் அவ்வாறே ஆகுக என்றுவரம் தந்து நாம் செங்கோலுடன் இங்கு இனி காட்சி தருவோம். சகல நோய் தீரும். சந்தேகம் வேண்டாம் என்று கிருபை பாலிக்க குணசீல மகரிஷி மனநிறைவோடு தன் குருநாதருடன் பத்திரிகாசிரமம் புறப்பட்டார்.

குணசீலர் ஸ்ரீபிரசன்ன வேங்கடவனை தவறாது பூசனை புரியவும் தன் சீடர்களில் ஒருவரை நியமனம் செய்திருந்தார். குருவின் கட்டளையை ஏற்றுச் சீடர் எம்பெருமானை பூசித்து வந்தபோது இறைவன் தனது அடுத்த திருவிளையாடல் ஆட திருவுளத்தில் கருதினார்.

எம்பெருமான் அமர்ந்த இடமோ, காவேரிக்கரை காட்டுப்பகுதி, ஆற்றுவெள்ளம் அடிக்கடி வந்து அல்லல்படுத்துவதை அறிந்த சீடன் எம்பெருமானை தனியே விட்டு புறப்பட்டுவிட்டான்.

### 5. புற்றில் மறைந்த பெருமான்

அரவமலைமேல் அமர்ந்தவன், அரவனையில் துயில்பவனாகிய எம்பெருமான் தன்னைச் சுற்றி புற்று எழும்பும்படிச் செய்து அதற்குள் தன்னை மறைத்துக் கொண்டார். திருமால் திருவுளம் யார் அறிவார்.

### 6. ஞானவர்மா

குணசீல க்ஷேத்திரத்திற்கு அருகே நிகளாபுரி என்னும் நகரம் இருந்தது. அதனை ''ஞானவர்மா'' என்ற அரசர் ஆண்டு வந்தார்.



அரசர் ஏராளமான பசுக்களை வைத்து கோசம்ரக்ஷணை சாலை அமைத்திருந்தார். பசுக்கள் மேய குணசீலத்திற்கு அருகில் மேய்ச்சல் காடும் விட்டிருந்தார்.

கறவை மாடுகளின் பாலைக் கறந்து யாதவர்கள் அரண்மனைக்குக் கொண்டு போய் கொடுப்பது வழக்கமாக நடைபெற்று வந்தது.

ஒரு சமயம் பசுக்களின் பாலைக் கறந்து குடங்களில் நிரப்பினால் குடத்தில் ஊற்றிய பால் மாயமாய் மறைந்து விடுவது வழக்கமாகி விட்டது. பசுக்களின் காவலர்களான யாதவர்கள் திகைத்தார்கள். அரசருக்கு என்ன பதில் சொல்லுவது என்று அஞ்சினார்கள். அரசவைக்கு இச்செய்தி எட்டும்படி ஆயிற்று.

நேரில் வந்து பார்ப்பதாக அரசரும் யாதவர்களுக்கு அறிவித்துவிட்டார். யாதவர்களில் வயது முதிர்ந்த ஒருவர் பேரில் ஆவேசம் வந்தது. நீங்கள் பயப்பட வேண்டாம். அரசர் வரட்டும் நானே நேரில் இதனை விளக்குகின்றேன் என்று ஆவேசம் வந்தவர் பேசினார்.

***-- நடந்தது என்ன? அடுத்த இதழில் காண்போம் --***

*(தொடரும்)*

# செவிச் செல்வம்

டாக்டர் அரங்க இராமலிங்கம், தமிழ்ப் பேராசிரியர்

அருட்செல்வம், பொருட்செல்வம், கல்விச் செல்வம் என அனைத்தையும் செல்வமாகத் தமிழர் போற்றினர். இச்செல்வங்கள் பலவற்றுள்ளும் செவிச் செல்வத்தையே திருவள்ளுவர் சிறப்புடையதாகக் குறிப்பிடுகிறார்.

''செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்
செல்வத்துள் எல்லாம் தலை'' *(411)*

என்னும் குறளில் ஐந்து முறை 'செல்வம்' என்ற சொல்லைக் குறித்துள்ளார். வாழ்வின் நோக்கமே செவிவழியாகக் கேட்டலே என்றும், அப்படிக் கேட்டலே ''உயிர்க்கு உறுதி பயக்கும் உணவு'' என்றும் அச்சீவப் பயிர்(ஜீவன்) தழைக்க அருமருந்தாகிய அமிழ்தம் செவி வழியாகக் கிட்டாதசில வேளைகளில் மட்டும் உடலை ஓம்ப வயிற்றுக்குச் சிறிது உணவு உண்ணலாம் என்றும் வள்ளுவர் குறிப்பிடுகிறார்.

''செவிக்குணவுஇல்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கும் ஈயப் படும்'' *(412)*

உயிராற்றலைத் தழைக்க வைத்து,தளிர்க்க வைக்கும் வான் அமிழ்தாகிய செவிச் செல்வத்தைக் கேட்டு, உண்டு, உணர்ந்து, அறிவோடு பொருந்தாமல் உடலை மட்டும் வளர்க்க உணவு உண்ணும் மக்கள் செத்தால் என்ன? உயிர் வாழ்ந்தால் என்ன? எனக் கடுமையாகக் கேட்கிறார் வள்ளுவர்.

''செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினும் என்'' *(420)*

இப்படிக் கடுமையாக வள்ளுவர் சாடுவதற்கு ஏதேனும் காரணம் இருக்க வேண்டும். அப்படியானால் செவிச் செல்வம் மிக முக்கியமானதாக இருக்க வேண்டும். அவரே இச்செல்வத்தின் உயர்வைப் பின்வருமாறு கூறுகிறார்.

''செவியுணவின் கேள்வி யுடையார் அவியுணவின்
ஆன்றாரோ டொப்பர் நிலத்து'' *(413)*

ஆன்மப் பயிர் தழைக்க, செவி வழியாகக் கேட்டுக் கேட்டு (அமிழ்தத்தை உண்டு, உண்டு) வாழ்கின்றவர் நிலத்தில் மனிதராக வாழ்ந்தாலும் (மனிதர் போல உண்டு, உடுத்தி, கடமையாற்றி) அவர்கள் தேவர்களோடு ஒப்பாவார்கள் என்கிறார், செவி வழியாகப் பெறப்படும் செல்வத்தின் பெருமை, இன்றியமையாமை இவற்றைக் குறிப்பிட்ட வள்ளுவர் இச்செல்வத்தைப் பெற்றவர் தேவரோடு ஒருவராகும் தன்மையர் என்பதில் ஆழ்ந்த பொருள் உள்ளது.

மழையை 'வான்நின்று ஒழுகும் அமிழ்தம்' என்கிறார் வள்ளுவர் (குறள் - 11) மழையாகிய அமிழ்தம் வருவதால் செடிகொடி முதல் அனைத்து உயிர்களும் புறநிலையில் தழைத்துத் தளிர்க்கின்றன. இஃது அண்டத்திற்குரியது.இதனையே பிண்டத்திற்கு என்று எடுத்துக் கொண்டால் குருபிரானின் சொல்லைச் செவி வாயாக நெஞ்சு களனாகக் கொண்டு அவரிடமிருந்து வான் அமிழ்தத்தையும் பெற்றுக் கொண்டால் அகநிலையில் ஆன்மப்பயிர் (ஜீவன்) தழைத்துத் தளிர்க்கும்.இதனால் மனம் அறிவோடு நெருங்கிப் பொருந்தி, அதுவும் உணர்வில் ஒன்றி மறைந்துவிடும். இறுதியில் எஞ்சியிருப்பது உணர்வு. அறிவேதான் தெய்வமென்றார் தாயுமானவர். அதுவும் அகத்ததுதான் என்பதை,

''ஐயப் படாஅது அகத்தது உணர்வானைத்
தெய்வத்தோடு ஒப்பக் கொளல்'' *(720)*



எனக் குறிப்பாகச் சுட்டிக் காட்டியவர் திருவள்ளுவர் (குறள் - 702) மனமற்ற பின்னர் அறிவு உணர்வில் ஒன்றி எல்லாம் (எல்லா உயிர்களும்) தானாக இருப்பதை அறிந்து கொள்ளும். இந்த நிலையில் உணர்விலே உயிராக ஒன்றிய அறிவு அன்பாக வடிவெடுக்கிறது. எதையும் எதிர்பார்க்காத தூய்மையான அன்பே சிவம். இதனைத் திருமூலர்,

''அன்பு சிவம்இரண் டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்:
அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே'' *(270)*

எனத் தெளிவாக உணர்த்துகிறார். இப்பெருநிலை யினைத்தான் ''என் கடன் பணிசெய்து கிடப்பதே'' எனத் திருநாவுக்கரசரும், ''அன்பர்பணி செய்ய என்னை ஆளாக்கி விட்டு

விட்டால்'' எனத் தாயுமானவரும், ''எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரும் தம்முயிர்போல் எண்ணி உள்ளே, ஒத்துரிமை உடையவராய் உவக்கின்றார் யாவரவர் உளம் தான் சுத்த சித்துருவாய் எம்பெருமான் நடம் புரியும் இடம் என நான் தெளிந்தேன்,அந்த வித்தகர்தம் அடிக்கேவல் புரிந்திட என் சிந்தை மிக விழைகிறது'' என வள்ளல் பெருமானும் குறிப்பால் உணர்த்தினர்.

இந்நிலை பக்தி, கர்ம, இராஜ, ஞான யோகங்களின் வழியாகவும், அட்டாங்க யோகங்களின் வழியாகவும் பெறக் கூடியது எனினும் எளிமையாக ஒரு மொழியில் குருவின் கருணையினால் அவர் வாய் அமிழ்தமாக செவிச் செல்வத்தைப் பெற்றுக் கொள்ளுவது எளிது. 'இப்பெருநிலை எல்லார்க்கும் உரியது, உரிமையுடையது, அடையத் தக்கது, அடைய முடியும்' என அறுதியிட்டு உறுதி கூறுகிறார் யோகி ஞானதேசிகசுவாமிகள்.

செவிச் செல்வம் பெற்றவர்கள் மனமற்ற நிலைபெற்று தூங்காமல் தூங்கி சுகம் பெறலாம். பேசாமல் பேசி மகிழலாம். எண்ணங்கள் சீர்பட்டால் எல்லாம் சீராகும். இதனைக் கிராமத்தில் சாதாரணமாக ''நெனப்பு தான் பொழப்பக் கெடுக்குது'' என்பார்கள். மனத்தைக் கொண்டே மனத்தை ஆராய்ந்தால் (அதாவது எண்ணங்களால் எண்ணங்களை ஆராய்தல்) பிணம் சுடுகிற தடிபோல் ஒரு நாளில் மனம் செத்துப் போகும் (அதாவது பிணம் சுடுகிற தடி, பிணம் எரிய எரியத் தானும் எரிந்து எரிந்து இறுதியில் அழிவது போல, மனமும் தன்னை உணர்ந்து, பின்னர் உணர்வில் கலந்து மறைந்து போகும்) என்பார் இரமண மகரிஷி. மனோவேகம், வாயுவேகம் என்பார்கள். 'ஒரு நிமிடத்திற்குள் கோடிக்கணக்கான எண்ணங்களை எண்ணி எண்ணி மனம் சலிக்கிறது' என்கிறார் திருவள்ளுவர். (குறள் - 337) அதனால்தான் தாயுமானவர் மனம் பற்றி மிக விரிவாகப் பல பாடல்களில் பாடியுள்ளார்.

''ஆழாழி கரையின்றி நிற்கவில்லையோ, ஆலம் அமுதாகவிலையோ'' என்ற பாடலில் என்மனம் குவிய ஒரு தந்திரம் செய்வது உனக்கு அருமையோ! என்று வினவுகிறார். மனத்தின்தன்மை பற்றியும், அதன் குரங்காட்டம் பற்றியும் தாயுமானவர் அளவிற்கு விரிவாகவும், விளக்கமாகவும் வெறொருவரும் பாடவில்லை என்றே கூறலாம். ''இதன் (மனம்) தன்மையை உணர்ந்தாலே இது அடங்கிவிடும்''. இதுதான் தமிழ்ச்சான்றோர் கண்ட முடிவுஎன்பார்டாக்டர்மு.வ.

அரிதாகவும், பெருமுயற்சிக்குப் பிறகும். அடைய வேண்டிய இப்பெருநிலையை (சிந்தனையை அடக்கியே சும்மா இருக்கும் திறம்) செவிச் செல்வத்தின் வழியாக எளிதாகப் பெறலாம் என்பதை வள்ளுவரும் பிற சான்றோர்களும் சுட்டிக்காட்டி உணர்த்துகின்றனர். அர்ச்சுனனுக்குக் கண்ணனும், தாயுமானவருக்கு மௌன குருவும், செவிச் செல்வமாக வழங்கியது எல்லாம் ஒன்றுதான். வள்ளலாரும், மாணிக்கவாசக! உன் கவிதைகளில், உன்பாட்டில், உன் நூலில் என்று சொல்லாமல் ''நின்வாசகத்தை நான் கலந்து'' என்று பாடுகிறார். வாசகம் என்ற சொல் இங்கே செவிச் செல்வத்தைக் குறிப்பிடுகிறது. இப்படிப்பட்ட உயர்ந்த செவிச் செல்வத்தை வழங்கத் தகுதியான குருபிரான் தேவை. பெறுபவர்க்கும் தகுதிகள் தேவை. வாழுகின்ற சில குருமார்களும் பெறுபவனின் தகுதியைப் பல நிலைகளில் சோதித்தும், ஊடியும், கூடியும், சினந்தும், கடிந்தும், பிரிந்தும், போக்குக் காட்டுகின்றனர்! என் செய்ய இயலும்! எல்லாம் அந்த ஞானதேசிகனுக்கே புரியும். எல்லாம் அவரவர் முயற்சியையும் ஆதிநாள் வினையையும் பொறுத்தது.

இவ்வாறு பல நிலைகளில் பொருள் கொள்ளுமாறு திருவள்ளுவரின் ஒரு குறட்பா (செல்வத்தின் செல்வம்) அமைந்துள்ளது. இஃது விரிப்பின் பெருகும். இக்குறட்பாவின் பொருள் விளக்கத் தக்கது அன்று, உணரத் தக்கதே!

# கோவில்பட்டி அருள்மிகு சொர்ணமலை கதிர்வேல் முருகன்

ஸ்தபதி. வே. இராமன்
தொல்லியல் துறை (ஓய்வு)

குன்றுகள் இருக்குமிடமெல்லாம் குடி கொண்டிருப்பவன் முருகன். முருகன் வழிபாடு தமிழகத்தில் தொன்றுதொட்டு இருந்து வருகிறது. பல்லவர் காலப் படைப்புகளான மாமல்லபுரம் மும்மூர்த்திக்குகை, தர்மராஜரதம், அர்ச்சுனன்ரதம் ஆகியவற்றிலும், திருச்சிராப்பள்ளி கீழ்க்குடைவரையிலும் எழில்மிகு முருகனின் சிற்பங்களைக் காணமுடிகிறது.

பழனி, திருத்தணி, திருப்பரங்குன்றம், சுவாமிமலை, திருச்செந்தூர், பழமுதிர்ச்சோலை, வயலூர், எட்டுக்குடி, சிக்கல் மற்றும் மருதமலை ஆகிய ஊர்களில் அமைந்துள்ள முருகனின் திருத்தலங்கள் தனிச்சிறப்பு வாய்ந்தவை. இதன் தொடர்ச்சியாக தூத்துக்குடி மாவட்டம், கோவில்பட்டியின் தென்மேற்கு திசையில் அமைந்துள்ள சொர்ணமலைக் கதிர்வேல் முருகன் பழமையானவர். சிறப்புப் பெற்றவர். இங்கு முருகப் பெருமான் கதிர்வேல் முருகனாக வச்சிரவேல் வடிவில் வீற்றிருந்து அருளாட்சி புரிகிறார். இது போன்ற அமைப்பு தென்னகத்தில் வேறு எங்கும் காண இயலாததொன்றாகும்.



இந்து சமய அறநிலைய ஆட்சித்துறையின் கீழ் வரும் அருள்மிகு செண்பகவல்லி அம்பாள் உடனுறை பூவனநாதசுவாமி கோயிலின் கட்டுப்பாட்டில் உள்ள இத்திருக்கோயில் புதுப்பிக்கப்பட்டு மூலவர் சன்னதி, விநாயகர் சன்னதி, தண்டபாணி சன்னதி பைரவர் சன்னதி மற்றும் மண்டபம் என விரிவு படுத்தப்பட்டுள்ளது.

இலங்கையில் உள்ள கதிர்காமர் வேலன் திருக்கோயிலில் பிடிமண் எடுத்து வரப்பட்டு ஆகம விதிகளின்படி திருக்கோயில் அமைத்து சிறப்பாக வழிபட்ட திருத்தலம். முருகன் வேல் வடிவில் இலங்கை மட்டுமல்லாமல் மலேசியா வாழ் தமிழர்களும் வழிபட்டு வருகின்றார்கள் என்பதனை இங்கு நினைவு கூறலாம்.

வடக்கு தெற்காக நீண்டும், கிழக்கு மேற்காக பரந்தும் காணப்படும் இம்மாபெரும் மலையின் மேடான உச்சியில் திருக்கோயில் அமைந்துள்ளது சிறப்பாகும்.

கிழக்கு நோக்கிய பார்வையில் அமைந்துள்ள இத்திருக்கோயில் இரு திருச்சுற்றுக்களைக் கொண்டது. மூலவர் வீற்றிருக்கும் முகமண்டபத்துடன் கூடிய கருவறை சதுர வடிவினதாகும். சதுர வடிவில் அமையும் கருவறையானது இறைவனின் முக்குணங்களில் ஒன்றான சாத்வீக குணத்தை உடையது என்பர் பெரியோர். கருவறையானது உபபீடம், அதிட்டானம், பாதம், பிரஸ்தரம் மற்றும் உபகிரீவத்துடன் கூடிய இரு நிலை விமானம் என்ற அமைப்பில் எழுப்பப்பட்டுள்ளது.

உபபீடமும், அதிட்டானம் மற்றும் விமானங்கள் சிற்ப ஆகம விதிப்படி பலவிதமான வர்க்க வரிமானங்களுடன் அழகுற கட்டமைக்கப் பட்டுள்ளது. மூலவர் விமானத்தின் சிகரம் வேசரம் கலைமுறையில் அமைந்து வெகு தொலைவில் இருந்தே கண்டு தரிசிக்கும் வகையில் கட்டமைக்கப் பட்டுள்ளது.

இந்த விமான முதல் நிலத்தில் நான்கு திருப்பங்களிலும் சதுர வடிவிலான கர்ணகூடுகளும், மையமாக நீள்சதுர முகசாலையும் இவ்விரண்டிற்கும் இடையே பஞ்சரமும் அமைந்து இவைகள் நாற்புறமும் மாலைபோல் சுற்றிவருவதாய் கட்டப்பட்டுள்ளது. சிகரமானது வேதிகை, கண்டம், தூக்கோடு, கண்டமாலை, மேல்பத்மம், பண்டியல், பத்மம், மாலைக்கட்டு, கண்ணாடி சட்டம், மகாபத்மம், அலுங்குகள், மகாநாசிகள் என்ற அலங்கார அணிகள் யாவும் கலைநயத்துடன் அமைக்கப்பட்டுள்ளது.

முதல் நிலத்தின் மேல் மட்டத்தில் திருப்பங்களில் பூதகணமும் இதன் இருபுறமும் மயில் உருவமும் கம்பீர தோற்றத்துடன் இடம்பெற்றுள்ளது. விமானத்தைச் சுற்றிலும்



குமரனின் பல்வேறு வடிவிலான சுதை திருவுருவங்கள் பாங்குற நிறுத்தப்பட்டுள்ளனர். இறுதியில் கலசம் பரவசமாய் காட்சியளிக்கிறது.

கன்னி மூலையில் கிழக்கு நோக்கி அமர்ந்துள்ள விநாயகர் பெருமானின் விமானம் ஏகதளமாகும். மூலவர் விமானம் சிகரம் அமைப்பிலிருந்து மாறுபட்டு நாகர கலைமுறையில் உள்ளது. விமானத்தின் நான்கு திசைகளிலும் விநாயகரின் சுதை திருவுருவங்கள், திருப்பங்களில் வாகனம் ஆகியன வடிவமைக்கப்பட்டுள்ளன.

வாயு மூலையில் கிழக்கு நோக்கி தண்டபாணி நின்ற நிலையில் அருள்புரிகிறார். இப்பெருமானின் விமானமும் ஏகதளமாகும். விமானத்தின் நான்கு மாடங்களிலும் திருமுருகனின் திருவுருவங்கள் திருப்பங்களில் முருகனின் வாகனமான மயில் காட்டப்பட்டுள்ளது.

மூலவருக்கு எதிரே மயில் பீடமும், பலிபீடமும் அமைகிறது. மூலவர் கருவறையின் திருவாயில்படி சிவனையும், பார்வதியையும் நினைவுபடுத்தும் வகையில் இரண்டு வாயிற்படிகளைக் கொண்டுள்ளது. ஈசான்ய பாகத்தில் பைரவர் மேற்கு நோக்கிய பார்வையில் நிறுத்தப்பட்டுள்ளார்.

மூலவரான கதிர்வேல் முருகன் வச்சிரவேல் சுமார் ஆறு அடி உயரம் கொண்டதாய் திருவாசியுடன் கம்பீரமாக வணங்குவோர்க்கு அருளை அள்ளித்தரும் வகையில் பரவசமாய் காட்சி அளிக்கிறார். முருகனை வழிபட வடக்குப் பக்கமாக அமைக்கப்பட்டுள்ள ஆறு வாயில் படிகள் முருகனின் ஆறுமுகங்களையும், ஷன்மதத்தையும் நினைவுபடுத்தும் வகையில் அமைகிறது.

மண்டபத்தின் வடக்கு மற்றும் கிழக்குப் பக்கங்களில் சாலாகாரம் அமையப்பெற்று மாடங்களில் முருகனின் திருவுருவங்கள் எழிலாய் நின்ற நிலையில் காட்சி தருகின்றனர்.

இத்திருக்கோயிலைச் சுற்றி கிரிவலப்பாதை அமைக்கப்பட்டுள்ளது. வடக்கிலும், கிழக்கிலும், தெற்கிலும் முதியவர்கள் கூட சிரமம் இன்றி செல்லத் தக்கவகையில் நல்ல சாலை வசதி செய்யப் பட்டுள்ளது.

குண்டும், குழியுமாக இருந்த இம்மலையை நல்ல முறையில் செப்பனிட்டு வழிபாட்டிற்கு கொண்டு வந்துள்ள திருப்பணி குழுவினர் சாலையின் இரு பக்கங்களிலும் நிழலையும், காற்றையும் தரும் வகையில் பசுமையான மரங்களை சோலை போல் அமைத்து வழிபட வருவோரை அசைந்து வரவேற்கின்ற நிலையில் வளர்த்துள்ளனர். காலையிலும், மாலையிலும் அருமையான சுத்தமான காற்று இதயத்தைக் குளிர வைக்கிறது.

முருகன் என்றால் அழகன் என்று பொருள். அந்த அழகு வேலனுக்கு அழகு சேர்க்கும் வகையில் விமானங்களுக்கும், சுதைச் சிற்பங்களுக்கும் பஞ்சவர்ணம் அழகுபட பொலிவு பெறச் செய்துள்ளனர்.

இத்திருக்கோயிலுக்கு செல்ல கோவில்பட்டி பேருந்து நிலையத்திலிருந்து சிற்றுந்து மற்றும் வாகன வசதிகள் உள்ளது.

*17.3.2006* அன்று நல்ல நாளில் கும்பாபிஷேகம் கண்ட மகிழ்வில் உள்ள கதிர்வேல் முருகன், விநாயகர், தண்டபாணி, பைரவர் மற்றும் உற்சவ மூர்த்திகளை நாம் தினந்தினம் கண்டு வழிபட்டு, வணங்கி, எல்லா நலமும், செல்வமும் பெற்று வாழ்வில் உயர்வோமாக.



# தமிழ்நாட்டுச் சித்தர் பரம்பரை - அகத்தியர்

''செந்தமிழ் வாரிதி'' முனைவர் இரா. செல்வக்கணபதி

அகத்தியர் என்ற பெயரில் வெவ்வேறு காலங்களில் வடநாட்டில் இருவரும், தென்னாட்டில் இருவரும் வாழ்ந்திருக்க வேண்டும் என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர். சித்தர்கள் மரபில் குறிக்கப்படும் அகத்தியர் பிற்காலத்தவராகலாம். முன் இதழ்களில் குறித்தவாறு, அகத்தியர் செய்தனவாகப் பல மருத்துவ நூல்கள் கிடைக்கப் பெற்றுள்ளன. இவை யாவும் சித்தர் நூல்கள் பலவும் கொண்ட யாப்பமைதியையும், நடையையும் கொண்டே இயங்குகின்றன. அகத்தியர் கண்டு வெளிப்படுத்திய மருத்துவ நுட்பங்கள், நெடுங்காலம் ஆசிரியர்- மாணவர் முறையில், செவி வாயிலாகவே பாதுகாக்கப்பட்டிருக்க வேண்டும். கி.பி. 15ஆம் நூற்றாண்டுக்குப் பின் வாழ்ந்த மருத்துவ நூல் புலமைமிக்க கவிஞர்கள், அகத்தியர் கருத்துக்களைச் செய்யுளாக வடித்து, அவர் பெயரில் உலவ விட்டிருக்க வேண்டும் என்றே தெரிகிறது.

தமிழ்நாட்டுச் சித்தர் பரம்பரையில் ஒருவராகவே நாம் இங்கே அகத்தியரை ஆய்வுக்கு உட்படுத்துகிறோம். எனவே, தமிழ் வளர்ச்சியில் அகத்தியர் ஆற்றிய பங்கினை நாம் இங்கே ஆய்வுக்கு உட்படுத்தவில்லை.

அகத்தியர் பெயரால் வழங்கும் சித்த வைத்திய நூல்கள் பல என்பது முன்னரே கூறப்பட்டது. அவற்றுள் ஒன்றிரண்டு நூல்களைப் பற்றிய குறிப்புகள் கீழே தரப்பட்டுள்ளன. இவை அகத்தியரின் பெயரில் நிலவும் நூல்களின் பொதுவான இயல்பினை அறியவென்றே வழங்கப் பட்டுள்ளன. சித்தநூல் ஆய்வாளர்களும், சித்த மருத்துவ ஆய்வாளர்களும், இத்தடத்தில் மேலாய்வுகள் நிகழ்த்தும் கடமை உடையவர்கள்.

அகத்திய மாமுனிவர் அருளிச் செய்த 'பரிபூரணம் 1200' என்பது ஒரு நூல். 1986இல் முதல் முதலில் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. ஏட்டுச் சுவடியிலிருந்து பெயர்த்தெழுதி இந்நூலை ந.தெ. சிகாமணி முதலியார் என்பவர் பதிப்பித்துள்ளார்.

அந்நூலை இந்து சமய அறநிலையத் துறை அமைச்சராக இருந்த ஹச். வி. ஹண்டே இந்நூலுக்கு முகவுரை வழங்கியுள்ளார். அவர் எழுதுகிறார்.

''பரிபூரணம் 1200 என்ற சித்த நூல் மக்கள் நோயின்றி நலமுடனும், நீண்ட ஆயுளுடனும் வாழ்ந்து, மக்களுக்குத் தேவையான நற்காரியச் செயல்களைச் செய்வதற்கு வழிவகைகளை நமக்குச் சொல்கிறது''

''அகத்தியர் பரிபூரணம் 1200'' என்ற இந்த சித்த மருத்துவ நூலில் 1201 பாடல்கள் இடம் பெற்றுள்ளன. தோற்றத்தில் பாடல்கள் எண்சீர் ஆசிரியவிருத்தம் போல் காணப்படுகின்றன. சீர், அடி, தொடைகளில் ஏராளமான பிழைகள் உள்ளன. யோக மார்க்கங்களும், மருத்துவ முறைகளும் விரிவாக இந்நூலுள் விளக்கப்பட்டுள்ளன.

சிறப்பாக இந்நூலுள், அகர உகர விளக்கம், அட்டாங்கம், ஆறாதாரம், ஆத்தும தத்துவம், ஆசனம் 9, உச்சாடன மந்திரம், ஐந்துவகை



ஆச்சிரமம், கணபதி மந்திரம், குழு தியானம், 1008 குளிகை வகைகள், சக்தி மகிமை, ஐவகைச் சமாதி நிலைகள், சிவதீட்சை, ஞானயோகம், எழுவகைத் தயிலங்கள் செய்முறை. திருநடனமுறை, நால்வகை யோகிகள், நிட்டைவிபரம், பதி, பசு, பாசவிளக்கம் 705 பஸ்பவகைகள், ரசமணி, எண்வகை வசிய முறைகள், வாலைபூசைமுதலான பலவும் முறையாக வகுத்துரை செய்யப்பட்டுள்ளன.

அகத்தியருக்குக் காலத்தால் முற்பட்டவர்களும், சம காலத்தில் வாழ்ந்தவர்களுமாகிய சித்தர்களில், கருவூரார், கமலமுனி, கும்பமுனி, கோரக்கர், சட்டைமுனி, சுந்தரானந்தர், திருமூலர், நந்தீசர், போகர், மச்சமுனி முதலியோர் பற்றிய தகவல்கள் தனித் தனிப் பாடல்களில் குறிக்கப்பெற்றுள்ளன. இந்நூல் பாடல் போக்கு எவ்வாறு உள்ளது என்பதைத் தெரிந்து கொள்ள ஒரு பாடல் காணலாம்.

குருவருள் பெறுவதற்கான வழிமுறை கூறுகிறது ஒரு பாடல்.

**''பார்க்கவென்று பலநூலும் தேடிப் பார்க்கப்**
**பக்குவங்கள் இல்லையடா வயதோ கொஞ்சம்**
**மார்க்கமுடன் கொஞ்சவய தானால் என்ன**
**மகத்தான சற்குருவைத் தேடிப் பார்த்து**
**ஏர்க்கையுடன் அவர்மனதுக் கேற்க நல்ல**
**இன்பமுடன் தயவுவர நடந்தா யானால்**
**தீர்க்கமுடன் சக்திசிவ தீச்சைவைத்தே**
**செம்மையுடன் உதியந்தத் திறஞ்சொல் வாரே''**

சித்தர் அகத்தியர் பெயரில் வழங்கும் பிறிதொரு நூல் ''வயித்தியரத்தினச்சுருக்கம் முந்நூற்றறுபது'' என்பது. 360 பாடல்களும் கிடைத்துள்ளன. இந்நூல் தி. கந்தசாமி பிள்ளை என்பரால், அறுபது ஆண்டுகளுக்கு முன் வந்த ஒரு ''யுவ'' ஆண்டில் மூலம் மட்டும் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. காப்புச் செய்யுள் விநாயகரைப் போற்றி, நூலடக்கச் செய்திகளைத் தொகுத்துச் சொல்கிறது.

**''பூரணமாய் நிறைந்த குரு**
**பறைதாள் போற்றிப்**
**புகலுகின்றேன் வயித்திய**
**ரத்னச் சுருக்கம் தன்னை**
**வாரணமா முகத்தோனைப்**
**பணிந்து வாழ்த்தி**
**வயித்தியம்தான் முன்னூற்றோ**
**டறுபதுந்தான்''**

என்று முகவுரை கூறி, அடுத்து நூலுள் சொல்லப்பட்டுள்ள பல்வகை மருந்தின் திறங்களைப் பட்டியல் இடுகிறது.

**''காரமாம் செந்தூரம் பற்பம்**
**லேகியம், கருவான தயிலம்**
**கிருதம் எண்ணெய்**
**சூரணம், மாத்திரை, நாடி''**

என்பன இந்நூலுள் விளக்கப்பட்டுள்ளன என்கிறது அடுத்த பாடல்.

நாடி நிதானம் என்ற முதல் பகுதியில் சித்த மருத்துவத்தில் நோய் அறிவதில் பெரும் பங்கு வகித்த நாடி பார்க்கும் திறம் விரிவாக விரிந்துரைக்கப்படுகிறது. நாடி பார்க்கும் முறை, நாடி பார்க்கும் காலம், நாடி இலக்கணம் யாவும் முறையாக விளக்கப் பெற்றுள்ளன. இன்னின்ன நாடிகளை இன்னின்ன பொழுதில் மட்டுமே பார்த்தல் வேண்டும் என்பதை

**''காலமே சேத்துமநாடி கட்டுச்சிப் பித்த நாடி**
**மாலையில் வாதநாடி வகை தப்பிப் பதறி நின்றால்**
**ஏலவே இவர்கட் கெல்லாம் இயம்பினார் இதுதாமென்று**
**நாளஞ்சில் மரணமென்று நன்முனி அருளிச் செய்தார்''**

சேத்துமநாடி - காலைப் பொழுதிலும், பித்தநாடி உச்சிப் பொழுதிலும், வாத நாடி மாலையிலும் பார்க்கப்படவேண்டும் என்கிறது பாடல்.

இந்நூல் முன்னுரையில் அகத்தியரின் மருத்துவ நூல்கள் பலவும் அக்காலத்தே அச்சிட்டு விற்பனைக்கு வைக்கப்பட்டிருந்த விபரம் தெரிய வருகிறது. அவை அகத்தியர் சிவ குளிகை, அகத்தியர் சூத்திரம், அகத்தியர் வகார சூத்திரம், அகத்தியர் வழலை சூத்திரம், அகத்தியர் ஞானம் முதலாகிய 16 நூல்கள் பெயர்கள் தரப் பெற்றுள்ளன. அவற்றுள் ஒன்றையும் பல நூலகத்தில் தேடியும் பெற இயலவில்லை. அரிதாக இந்த வைத்திய ரத்தினச் சுருக்கம் திருவான்மியூர் உ.வே.சா. நூலகத்தில் கிடைத்தது. அகத்தியர் குறித்த முழுமையான நூல்கள் இனிமேல்தான் வந்தாக வேண்டும்.

(முற்றும்)



# அருள்மிகு தாயுமானசுவாமி திருக்கோயில்

## மலைக்கோட்டை, திருச்சிராப்பள்ளி

பொ. ஜெயராமன், உதவி ஆணையர்/ செயல் அலுவலர்

''வாக்கு உண்டாம் நல்லமனம் உண்டாம் மாமலராள்
நோக்கு உண்டாம் மேனி நுடங்காது - பூக்கொண்டு
துப்பார்திருமேனித்தும்பிக்கையான்பாதம்
தப்பாமல்சார்வார்தமக்கு''

- ஔவையார்

தென்கயிலாயம் எனப் போற்றப்படும் தாயுமானசுவாமி திருக்கோயில் காவிரியின் தென் கரையில் திருச்சிராப்பள்ளி நகரின் மத்தியில் ஒப்பற்ற சுகப்பிரசவ பிரார்த்தனை தலமாகவும், திருச்சிராப்பள்ளிக்கே பெருமை சேர்க்கும் வகையில் வானுயர்ந்த உச்சிப்பிள்ளையார் கோயிலையும், மலை அடிவாரத்தில் மாணிக்க விநாயகரையும் கொண்டு விளங்குகிறது. மலைமேல் மூன்று தள அமைப்பைக் கொண்ட இவ்வாலயம் உலகில் வேறு எங்கும் இல்லாத வகையில் கட்டிடக் கலைக்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறது. மூர்த்தி, தலம், தீர்த்தம் எனும் முப்பெருமைகளுடன் பல அருளாளர்களால் பாடப்பெற்ற சிறப்பை கொண்டது இவ்வாலயம். வரலாற்று முக்கியத்துவம் கொண்ட சுற்றுலாத் தலமாக மட்டுமல்லாமல் சிறந்த வழிபாட்டுத் தலமாகவும் விளங்குகிறது.

தமிழகத்தில் விநாயகருக்கு உயர் முக்கியத்துவம் கொடுத்து அமைந்துள்ள ஆலயங்களில் முக்கியமானது திருச்சி மலைக்கோட்டை, உச்சிபிள்ளையார் ஆலயம் ஆகும்.

**மலைக்கோயிலில் உறையும் உச்சிவிநாயகர் பெருமை (பார்போற்றும் உச்சி விநாயகர்)**

மலைக்கோட்டை என்றதுமே நம் நினைவிற்கு வருவது உச்சிபிள்ளையார் தான். இத்தலத்தில் கிழக்கு நோக்கி கருணையே வடிவமாக காட்சி தருகிறார். கம்பீரமான தோற்றத்துடன் விளங்குகிறார். திருச்சிராப்பள்ளியின் திசைகள் எங்கிருந்து நோக்கினாலும், இவர் அமர்ந்துறையும் காட்சி கண்கொள்ளாக் காட்சி ஆகும்.

நிலமட்டத்தில் இருந்து 273-அடி உயரத்தில் 417-படிகளைக் கடந்து சென்றால் இவரை தரிசிக்கலாம், உச்சிவிநாயகர் திருக்கோயிலைச்சுற்றி திருச்சுற்றுப் பிரகாரம் உள்ளது. இங்கிருந்து திருச்சிராப்பள்ளி நகரை பகல் மற்றும் இரவு நேரங்களில் காணும் காட்சி ஒரு விமானத்தில் இருந்து நகரையும் சுற்றுப் புறங்களையும் காண்பது போன்று இருக்கும். உச்சிவிநாயகர் சன்னதியிலிருந்து பார்த்தால் மலையும், படிக்கட்டுகளும் விநாயகரின் துதிக்கை போல இயற்கையிலேயே அமைந்துள்ளதைக் காணலாம்.

இராமர் பட்டாபிசேகத்திற்கு சென்ற விபீஷ்ணர், இராமனிடம் விடைபெறும்போது இராமர் தனது ஞாபகார்த்தமாக அரங்கநாதரை விமானத்துடன் பரிசாக அளித்தார். விமானத்தை பூமியில் வைக்குமிடத்தில் விமானம் நிலையாக இருக்குமென்பதை விபீஷணரிடம் தெரிவித்தார். விபீஷணர் அதை இலங்கையில் வைக்க விரும்பி கொண்டு சென்றார். அந்தணர் உருவம் கொண்டு காவிரிக் கரையில் நின்ற சிறுவனிடம் கொடுத்துவிட்டு, காவிரிக் கரையில் நீராடச் சென்றார். அந்தணச் சிறுவன் தான் அழைத்தவுடன் வரவேண்டுமென்றும் மூன்று முறை அழைத்தும் வராவிட்டால் பூமியில் வைத்து விடுவதாகவும் கூறினான். விபீஷணரும் சம்மதித்து நீராடச் சென்றார். சிறுவன் விபீஷணரை மூன்று முறை அழைத்துவிட்டு விபீஷணன் வரும் முன்னரே பூமியில் வைத்துவிட்டு மலையின் உச்சியில் ஏறி ஓடினான். திரும்ப வந்து பார்த்த விபீஷணர் அரங்கர் விமானத்தை எடுத்துப் பார்க்க, அதை எடுக்க இயலாமல் நிலைபெற்றுவிட்டது. கோபங்கொண்ட விபீஷணர் அந்தணச் சிறுவனைத்



துரத்திச் சென்று தலையில் குட்டினார். அந்தணச் சிறுவன் உச்சி விநாயகராக காட்சி தந்தார். அரங்கநாதர் திருச்சிராப்பள்ளியிலேயே இருக்க வேண்டும் என்பது விநாயகப் பெருமான் திருவுளம் என அறிந்தார். இப்புராணம் விநாயகர் புராணத்தில் இடம் பெற்றுள்ளது. தற்போதும் உச்சிவிநாயகர் தலையில் 2 1/2 அங்குல அளவிலான குட்டுப்பட்ட பள்ளம் உள்ளது. மலையின் கீழ்ப்புறம் தற்போதும் விபீஷணர் பாதம் இரண்டு பாறையின் மீது உள்ளது.

உச்சிவிநாயகர் வேண்டுவோர்க்கு வேண்டுவன எல்லாம் வழங்குகிறார். சதுர்த்தி, மற்றும் சங்கடஹர சதுர்த்தி காலங்களில், உள்ளூர் மற்றும், வெளியூர் அன்பர்களும் மலேசியா, சிங்கப்பூர் முதலிய வெளிநாட்டு மெய்யன்பர்களும் வழிபட்டு பல பேறுகளை பெறுவது கண்கூடு. மேலும் குன்றை நாடி வருபவர்களின் குறைகளை நீக்கி சர்வதேசஅளவில் பக்தர்களைக் கொண்டு விளங்குகிறார்.

**மலைக்கோயில் அடிவார மாணிக்கவிநாயகர் (காரியசித்தி விநாயகர்)**

மலைக்கோயிலின் அடிவாரத்தில் மாணிக்க விநாயகர் அருள்பாலித்து வருகிறார். இவர் சந்நதியில் எந்த நேரத்திலும் மக்கள் வெள்ளம் கூடியிருக்கும். செவ்வாய், வெள்ளி, மற்றும் சதுர்த்தி மாதப்பிறப்பு நாட்களில் பக்தர்கள் வெள்ளம் அலைமோதும். பலருக்கு இவர் ஆன்மார்த்த மூர்த்தி ஆவார். மலைமேல் செல்லும் யாவரும் இவரை வழிபட்டே செல்ல வேண்டும். இவரை வழிபட காரியசித்தி ஏற்படும். சகலதீமைகளும் நிவர்த்தியாகும்.

ஆடவர், மகளிர், மூத்தோர் யாவரும் இவரது அருள் வேண்டி நிற்பர். இங்குள்ள வியாபாரப் பெருமக்கள் இவரை வணங்கிவிட்டு காரியத்தை தொடங்குவர். மாணிக்க விநாயகருக்கு சதுர்த்தி நாட்களில் நடைபெறும் அபிஷேகம் கண்டு வழிபட்டால் உடல்நலம், கடன் தீர்த்தல், நோய் நீக்கம், மனத்தூய்மை, ஆயுள் நீட்சி, நன்மக்கட்பேறு, எமபயம் நீக்கம், இனிய போகங்கள், முதலிய நற்பேறுகளை அடையலாம்.

**செவ்வந்தி விநாயகர்**

குன்றின் நடுவில் தமிழகத்தின் நான்காவது பெரிய லிங்கமாகவும், சுயம்பு மூர்த்தியாகவும் மேற்கு பார்த்த நிலையில் உள்ள தாயுமானவர் சாரமாமுனிவரால் செவ்வந்தி மலர் கொண்டு பூஜிக்கப்பட்டதால் செவ்வந்தி நாதர் என்றும் அழைக்கப்படுகிறார். இவர் எதிரே கிழக்கு பார்த்த நிலையில் உள்ள விநாயகர் இறைவன் பெயரை கொண்டு செவ்வந்தி விநாயகர் என்று அழைக்கப்படுகிறார். இவரை வணங்குவதால் பிறவிப்பிணி அனைத்தும் நீங்கும்.

**விநாயகர் சதுர்த்தி விழா**

இவ்வாலயத்தில் இந்த ஆண்டு விநாயக சதுர்த்தி விழா ஆவணி மாதம் 11-ம் தேதி (27-08-2006) சிறப்பாகக் கொண்டாடப்பட உள்ளது.

**கொழுக்கட்டை நிவேதனம்**

விநாயக சதுர்த்தியன்று இத்தலத்தில், விநாயகருக்கு பிடித்த நிவேத்யமான கொழுக்கட்டைகள், இரண்டு 10-கிலோ அளவில் செய்யப்பட்டு, அருள்மிகு மாணிக்க விநாயகருக்கும், உச்சி விநாயகருக்கும் நிவேதனம்


அருள்மிகு மாணிக்கவிநாயகர்
(காரிய சித்தி விநாயகர்)

செய்யப்பட்டு பக்தர்களுக்கு விநியோகம் செய்யப்படுகிறது.

**உற்சவ சிறப்பு**

இத்தலத்தில் விநாயகசதுர்த்தி உற்சவம் 13-நாட்கள் சிறப்பாக நடைபெறுகிறது. உற்சவ நாட்களில் பால கணபதி, நாகாபரண கணபதி, லஷ்மி கணபதி, தர்பார்கணபதி, பஞ்சமுக கணபதி, மூஷிக கணபதி, இராஜஅலங்காரம், மயூரகணபதி, குமார கணபதி, வல்லப கணபதி, ரிஷிபாரூடர், சித்திபுத்தி கணபதி, நடன கணபதி முதலிய

அலங்காரத்தில் விநாயகர் காட்சி தருவது கண்கொள்ளாக் காட்சி ஆகும். மேலும் 13-ம் திருநாளன்று 28- வகையான மகாஅபிஷேகம் செய்யப்பட்டு வெள்ளி மூஷிக வாகனத்தில் விநாயகர்திருவீதி உலாநடைபெறும்.

**''விநாயகனே வெவ்வினையை வேரறுக்க வல்லான்**
**விநாயகனே வேட்கைதணி விப்பான்- விநாயகனே**
**விண்ணிற்கும் மண்ணிற்கும் நாதனும் ஆம் தன்மையினால்**
**கண்ணிற் பணியின் கனிந்து''**

-கபிலதேவர்

என்ற பாடலில் உள்ளது போல இத்தலத்தில் முழுமுதற்கடவுளான விநாயகப் பெருமான் - ''மண்ணிற்கும்'' என்பது போல மலை அடிவாரத்தில் மாணிக்க விநாயகராகவும், ''விண்ணிற்கும்'' என்பது போல வானுயர்ந்த நிலையில் உச்சிவிநாயகராகவும் இருந்து இப்பதி மெய்யன்பர்களின் கொடிய வினைகளை எல்லாம் வேரோடு அருத்து காப்பவராக உள்ளார். எண்ணிய அளவில் எளிதில் நமக்கு அருள்பாலிக்கும் பார்வதி, பரமசிவனுக்கு மானசீகப் புத்திரருமான, கணபதி, விக்னேஸ்வரர் என்று போற்றப்படும் விநாயகப் பெருமானை போற்றி நாளும் வழிபட்டு உய்வடைவோமாக!

# நாயில் கடையாய் கிடந்த அடியார்

**பொ. ராமநாதபிள்ளை, பி.ஏ., பி.எட்.,**
**செயல் அலுவலர், கரூர்**

பன்னிரு திருமுறைகளில் எட்டாம் திருமுறையாக விளங்குவது மாணிக்க வாசக சுவாமிகள் அருளிய திருவாசகமும், திருக்கோவையாரும் ஆகும். ''திருவாசகத்திற்கு உருகாதார் ஒரு வாசகத்திற்கும் உருகார்'' என்பதும் ''கன்னித்தமிழ் கண்டதொரு திருவாசகம்'' என்பதும், திருவாசகத்தின் பெருமையை சொல்லும் வாசகம் ஆகும்.

திருவாசகத்தில் சிவபுராணம் என்ற பகுதியில் சிவனது பெருமையைப் பற்றியும், தன்னுடைய சிறுமையைப் பற்றியும் பேசும் பொழுது ''நாயில் கடையாய் கிடந்த அடியார்க்கு தாயில் சிறந்த தயாவான தத்துவனே'' என்று தாயை விடவும் மிகுந்த கருணையாளன் என்று சிவபெருமானையும், நாயை விடவும் கீழ்மையானவன் என்று, தன்னையும் ஒப்பிடுகிறார்.



மணிவாசகப் பெருமான் ஏன் தன்னை நாயை விடவும் இழிந்தவன் என்று குறிப்பிடுவதை ஆராய்ந்தறியும் போது இதன் உண்மை விளங்கும். நாயானது தன்னை வளர்த்த தலைவனை அல்லது எஜமானை அவன் நூறு பேர் கூடி நிற்கின்ற கூட்டத்தில் நின்றாலும், அந்த நூறு பேர் கூட்டத்தில் தன்னுடைய தலைவனை கண்டுபிடித்து அவன் முன் சென்று, நின்று, வால் ஆட்டி நன்றியைத் தெரிவிக்கும். ஒரு நாய்க்குத் தன் தலைவன் யார் என்பதை அவன் எந்தக் கூட்டத்தில் இருந்தாலும் கண்டுபிடிக்கும் திறன் இருக்கிறது. இதனை உணர்ந்த மணிவாசகப் பெருமான் சிவபெருமானிடம் சொல்லும் போது நான் நாயை விடவும் இழிந்தவனாய் இருக்கிறேன். ஏனென்றால் சிவபெருமானே நீதான் தலைவன் என்று உன்னை நான் உணராமல் இருந்தேன். இறைவா! நீ திருப்பெருந்துறையிலே உன் திருவடியை என் மீது வைத்து என்னை ஆட்கொண்ட பிறகுதான் நான் உனக்கு அடிமையானேன். நீதான் தலைவன் என்று எனக்கு நீ அறிவிக்கும் முன்னே நான் அதை உணரவில்லை. உலக வாழ்விலும், அரசியல் வாழ்விலும், நான் இருந்தேன். ஒரு நாய்க்கு தன் தலைவனை கண்டு கொள்ளக்கூடிய அறிவு இருக்கிறது ! ஆனால் அது கூட எனக்கில்லையே... நீயாக வந்து என்னை ஆட்கொண்டபிறகுதானே ... நீதான் என் தலைவன் என்பதை உணர்ந்தேன். அப்படி பார்க்கும்பொழுது நான் நாயை விடவும் கடையவனாகி விட்டேன் என்று இறைவன் ஆட்கொள்ளுமுன் சிவபெருமான்தான் தன் தலைவன் என்பதை மனிதனாகப் பிறந்தும், உணராமல் இருந்த நிலையை எண்ணி நாய்க்கு தன் தலைவனைக் கண்டுபிடிக்கக்கூடிய திறன் இருந்தும், தனக்கு அது இல்லையே ! என்ற கழிவிரக்கத்தில் ''நாயில் கடையாய் கிடந்த அடியேன்'' என்று தன்னை மணிவாசகப் பெருமான் சொல்வது சிந்தித்து மகிழத்தக்கது.

# அட்ட வீரட்டத் தலங்கள்
# திருக்கோவலூர்

திருத்தல உலா - 2



எட்டு வீரட்டங்களில் இரண்டாவதாகக் குறிப்பிடப்படும் திருக்கோவலூர் என்ற வீரட்டனத்தலம் விழுப்புரம் மாவட்டத்தில் இயற்கையின் எழில் மண்டிக் கிடக்கும் பிநாகினி என்றழைக்கப்படும் பெண்ணை நதிக்கரையில் அமைந்துள்ளது. இங்கு பகவான் பரமேஸ்வரன், தேவர் முனிவர் அனைவரையும் காக்க வடுக பைரவ மூர்த்தியாய் இருந்து அந்தகன் என்ற அசுரனை போரில் மதமழியச் செய்து அருள் வழங்கினான் என்று சரித புராணங்களிலும் மந்திர சாஸ்திரங்களிலும் காணப்படுகிறது. அந்தகாசுரன் பற்றிய வரலாறுகள் மந்திர சாஸ்திரங்களிலும் பத்ம புராணத்திலும், லிங்க புராணத்திலும், மஹா புராணத்திலும் காணப்படுகின்றன. திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிச் செய்த தேவாரப் பதிகத்திலும் உள்ளது. அருணகிரிநாத சுவாமிகள் இங்குள்ள முருகனைப் பாடியுள்ளார். இக்கோயிலின் ஸ்தல விருட்சம் சரக்கொன்றை மரமாகும். சிவனுக்கு மிகப்பிடித்த புஷ்பம் சரக்கொன்றையாகும். இந்த புஷ்பம் சிவனுக்கே உரித்தான புஷ்பம். காரணம் இந்தப் பூவில் மேல் ஒரு வளையமும் ஐந்து இதழ்களும் இருக்கும். கம்பி போன்ற மேலுள்ள வளையம் ஓங்காரத்தைக் குறிக்கின்றது. கீழுள்ள ஐந்து இதழ்களும் நமச்சிவாய என்ற பஞ்சாட்ஷரத்தைக் குறிக்கின்றது. இவ்வாறு சிவனுக்கு உகந்த சரக்கொன்றை மரம் ஸ்தல விருட்சமாய் இருப்பது ஒரு தனிச்சிறப்பம்சமாகும்.

ஸ்ரீகச்சியப்பரும் கந்த புராணத்தில் முருகன் திருவதாரப் படலத்தில் ''கொன்றைய வியன்கொன்றை' எனப் பாடியுள்ளார். இங்கு சுயம்பு மூர்த்தியாய் வீரட்டேஸ்வரர் அம்பிகையுடன் மேற்கு நோக்கி அமர்ந்தருளிக் கொண்டிருக்கிறார். ஆலய பிரகாரத்தில் ஈசான்ய மூலையில் ஸ்ரீபைரவர் சன்னதி, நவகிரஹங்கள் உற்சவ மூர்த்திகள் முதலிய மூர்த்திகள் உள்ளனர். திருக்கோவலூர் திவ்ய க்ஷேத்திரம் சிறப்புகள் பல கொண்டு திகழுகின்றது. ஆனந்தவல்லி (பெரியநாயகி) ஸமேத ஸ்ரீமஹாபைரவர் அந்தகாசுரன் மதம் அடக்கிய பெருமையுடையவர். இங்கு அமர்ந்தருளிக் கொண்டிருப்பது இத்தலத்திற்கு சிறப்பை அளிக்கின்றது. இத்தலத்தில் பல காலம் வாழ்ந்து அதிகமாய் பெருமை தேடித்தந்தவர் ஔவையார்.

ஔவையார் திருக்கோவலூரில் தெய்வீகனுக்கு அங்கவை, சங்கவை என்ற இருவரையும் திருமணம் செய்து வைத்தபோது மூவேந்தர்கள் வந்ததற்கு அடையாளமாக மூவேந்தர்கள் வந்து தங்கிய இடம் செங்கணான்கொல்லை எனவும், சோழபாண்டிபுரம் எனவும், மூவேந்தர்கள் விருப்பத்தை நிறைவேற்ற வேண்டி பனம்பழம் அளிக்குமாறு ஔவையார் பாடியருளிய இடம் பனைப்பாடி என்றும், திருமணம் நடைபெற்ற இடம் மணம்பூண்டி என்றும், தெய்வீகனுக்கும் பாரி மகளிருக்கும் நடந்த திருமணத்தில் மனமகிழ்ந்த தேவர்கள் வாழ்த்திய இடம் தேவனூர் எனவும், ஔவையார் பெருமகிழ்ச்சியுடன் மூவேந்தரையும் வரவேற்று உபசரித்த இடம் திருப்பாலப்பந்தல் எனவும் அழைக்கப்படுகிறது.

**தீர்த்தமகிமை:**

தக்ஷிண பிநாகினி எனப்படும் இப்பெண்ணையாறு வீரட்டேஸ்வரர் திருக்கோயிலுக்கு வடப்பக்கத்தில் விளங்குவது. தமிழறிவிற் சிறந்ததென்று புலவரால் துதிக்கப்பெற்றது. ஔவையார் பாடலுக்கு நெய் பால் தலைப்பெய்து வந்த பெருமைக்குரியது. இதை

**''முத்தெறியும் பெண்ணை முதுநீரது தவிர்ந்து**
**தத்திவரு நெய்பால் றலைப்பெய்து - குத்திச்**
**செருமலைத் தெய்வீகன் திருக்கோவ லூர்க்கு**
**வருமளவுங் கொண்டோடி வா''**

என்னும் ஔவையார் பாடலாலும், ''ஔவை பாடலுக்கு நறுநெய் பால் பெருகியருந் தமிழறிவினாற் சிறந்து தெய்வமா நதிநீர் பரக்கு நாடு'' என்ற வரந்தருவார் வாக்காலும் அறியலாம்.

இத்தலத்திலுள்ள தீர்த்தம் பலவகைப் பெயர்களில் வழங்கப்படுகிறது. அவை உருத்திர தீர்த்தம், காபில தீர்த்தம், கண்ணுவ தீர்த்தம், இராம தீர்த்தம், இலக்குமண தீர்த்தம், சீதா தீர்த்தம், பரசுராம தீர்த்தம், யம தீர்த்தம், பிதிர் தீர்த்தம், சத்தவிருடியர் தீர்த்தம், சூரிய தீர்த்தம், அக்னி தீர்த்தம், பத்ரசங்கமம் என்பனவாகும்.

சிவபெருமான் வில்லின் வழித்தோன்றிய பிநாகினி என்னும் தென்பெண்ணை நதியில் நீராடி வீரட்டநாதனை வணங்குவோர் எவராயினும் தேவராவர். பெண்ணை நதிநீர் கொண்டு சிவபெருமானுக்குஅபிஷேகம் செய்வோர் உலகிலுள்ள இன்பந்துய்த்து, தேவருந்தொழ கயிலையைச்சேர்வர்.

**பதில்**

**பிரதோசம் என்பது யாது? அது பற்றிய புராணச் செய்தியைக் கூறுக.**

சுக்கிலபட்சம் (வளர்பிறை) கிருஷ்ணபட்சம் (தேய்பிறை) என்பவற்றில் வருகின்ற திரயோதசி திதியிலே மாலை நாலரை மணி முதல் ஏழரை மணி வரை உள்ள காலம் பிரதோசம் ஆகும்.

சிவபெருமான் ஆலாலம் என்னும் நஞ்சினை உண்டருளிய நாள் ஏகாதசி. அந்நாளில் தேவர்கள் அனைவரும் உணவருந்தாமல் இருந்து சிவபெருமானைப் பூசித்தனர்.

தேவர்கள் செய்த பூசனைக்கு மகிழ்ந்த சிவ பெருமான் அவர்களுக்கு அமுதத்தை வழங்கினார். தேவர்கள் தங்கள் பூசையை முடித்துக் கொண்டு இறைவன் அளித்த அமுதத்தை அருந்திய நாள் துவாதசி.

மறுநாள் திரயோதசி நாளில் சூரியன் மறைவதற்கு மூன்றே முக்கால் நாழிகை முதல் ஏழரை நாழிகை சிவபெருமான் துன்பத்தில் ஆழ்ந்து வருந்தும் உயிர்களெல்லாம் இன்பம் அடையும் பொருட்டு தமது திருக்கையில் டமருகம் ஏந்தி உமாதேவியார் காணும்படி திருநடனம் செய்தருளினார். அந்தக் காலமே பிரதோசகாலம் ஆகும்.

பிரதோசதினத்தன்று சனிக்கிழமையும் சேர்ந்து வருமாயின் அது மிகவும் சிறப்பானதாகும்.

பிரதோசவிரதம் நோற்க விரும்புவோன். சித்திரை, வைகாசி, ஐப்பசி, கார்த்திகை மாதங்களில் ஏதேனும் ஒன்றில் வரும் சனிப் பிரதோசம் முதலாக அனுஷ்டித்துப் பயன்பெறலாம்.

பிரதோசநாளில் திருக்கோயிலுக்குச் சென்று விதிப்படி அன்புடன் வழிபட்டால் எல்லா நலங்களும் பெறலாம்.

**சப்தவிடங்கத் தலங்கள் என்பன யாவை? அவ்வத் தலங்களுக்கு முறையே உரிய நடனம் யாது?**

திருவாரூர், திருநள்ளாறு, திருநாகைக் காரோணம், திருக்காறாயில், திருக்கோளிலி, திருவாய்மூர், திருமறைக்காடு என்னும் ஏழு தலங்களும் சப்தவிடத்தலங்கள் என்று கூறப்படும்.

சப்தம் - ஏழு

விடங்கர் - தியாகராஜர், உளியால் செதுக்கப் படாதவர்

''சீரார் திருவாரூர் தென்நாகை நள்ளாறு
காரார் மறைக்காடு காறாயில் - பேரான
ஒத்ததிரு வாயமூர் உவந்ததிருக் கோளிலி
சத்த விடங்கத் தலம்''

இத்தலங்களுக்கு முறையே உரிய இறைவனின் திருப்பெயர்களும், நடனங்களும் பின்வருமாறு:

| தலம் | இறைவனின் பெயர் | நடனம் |
|---|---|---|
| 1. திருவாரூர் | வீதிவிடங்கர் | அசபா நடனம் |
| 2. திருநள்ளாறு | நகவிடங்கர் | உன்மத்த நடனம் |
| 3. திருநாகைக் காரோணம் | சுந்தரவிடங்கர் | பாராவாரதரங்க நடனம் |
| 4. திருக்காறாயில் | ஆதிவிடங்கர் | குக்குட நடனம் |
| 5. திருக்கோளிலி | அவனிவிடங்கர் | பிருங்க நடனம் |
| 6. திருவாய்மூர் | நீலவிடங்கர் | கமல நடனம் |
| 7. திருமறைக்காடு | புவனிவிடங்கர் | அம்ஸபாத நடனம். |

## வாசகர் கருத்து

முத்தான கருத்துக்களை சத்தான வார்த்தைகளால் சான்றோர் வியக்கும் வண்ணம் தமிழாய்ந்த தமிழாசிரியர்களால் சிறப்பிக்கப் பெறும் திருக்கோயில் ஏடு வாழ்க! வளர்க! அறிந்தும் அறியாததுமான அரிய பெரிய ஆன்மீக வரலாறுகள் அடங்கிய இவ்வேடு திங்கள் ஒரு முறைதான் வருமோ? மேலும் வளர்ந்து திங்கள் இருமுறை என வராதோ என்ற ஏக்கம்.

**அ. நடராசன், சென்னை - 600 019**

உலகாளும் நாயகியாம் உமையவள் திருக்கடவூர் திருத்தலத்தில் அபிராமியாய் வீற்றிருந்து அருள் பாலித்து வருகிறாள். அந்த அன்னை மீது அபிராமி பட்டர் பாடிய அபிராமி அந்தாதியின் அற்புத வரிகளை ஆங்காங்கே கோடிட்டுக் காட்டி அன்னையின் மகத்துவங்களை, அவளை வணங்கி வழிபடுவோருக்கு நல்லன எல்லாம் தருபவள் என்ற தெய்வீக உண்மைதனை உணர்த்தி எழுதப்பட்ட கட்டுரை தெய்வீகச் சிலிர்ப்பை அளித்தது.

**த.சத்திய நாராயணன், சென்னை- 600 038.**

ஜூலை - 2006 இதழில் வெளிவந்துள்ள ''எட்டும் சிவ பெருமானும்''

சிவபெருமானின் அரிய பெரிய பெருமைகளை தெரிய வைத்த ''திருக்கோயில்'' கோடி கோடி நமஸ்காரங்கள்.

**ரா.சந்திரதாசன், புதுவை - 11.**

# பெருமைக்குரிய பெரியகோவில் - கச்சித் திருவேகம்பம்

காஞ்சிபுரம் என்றாலே அனைவர் மனத்திலும் தவறாமல் தரிசிக்க எண்ணுவது காஞ்சி காமாட்சி, தேவராஜப்பெருமாள், ஏகாம்பரநாதர் திருக்கோயில்கள் ஆகும். ஏகாம்பரநாதர் ஆலயம் என வழங்கப்படும் திருவேகம்பப் பெருமான் கோயில் பெருமைக்குரிய பெரிய கோயிலாகும்.

பெரியகோயில் - அளவிலேயும் பெரிய கோயில் - பெருமையிலேயும் பெரிய கோயில். ஆம். கோயில் தரைப்பரப்பு எவ்வளவு தெரியுமா? மலைத்து விடாதீர்கள், 23 ஏக்கர் பரப்பளவு கொண்டது. 5 சுற்று மதில்கள் உடைய அழகிய ஆலயம். அந்த அழகிய ஆலயத்துக்கு மேலும் அழகூட்டும் நுழைவாயிலான இராஜகோபுரம் ''ஒன்பது நிலை தழீஇய ஓங்கு கோபுரம்'' என்ற காஞ்சிப்புராண வரிக்கு ஏற்ப 9 நிலைகள் கொண்ட 192 அடி உயரம் உடையது. கி.பி.1509 ஆம் ஆண்டில் கிருஷ்ண தேவராயரால் கட்டப்பட்டு வானுற உயர்ந்து நின்று, காண்போரைத் தன்னிடத்தே வருமாறு அழைக்கின்றது.

காஞ்சியின் பழமை அனைவரும் அறிந்தது. கயிலையில் விளையாட்டாக இறைவனின் திருக்கண்களை இறைவி மூட, அதனால் உலகம் இருண்டு விட, பிறகு தவறு உணர்ந்த இறைவி மன்னிப்பு வேண்ட, இறைவன் அதற்குக் கழுவாயாகக் காஞ்சி சென்று சிவபூசைசெய்யுமாறு கூற, இறைவி வந்து வழிபட்டதலம் காஞ்சிபுரம் ஆகும். (இந்நிகழ்ச்சியைக் காட்டும் திருக்கண் புதைத்த சிற்பம் ரிஷிகோபுரத்தின் உள்ளே நுழைந்ததும் வலப்புறம் உள்ள மண்டபத்தூணில் உள்ளது). இதனைக் ''கயிலையில் இழைத்த குற்றம் கழுவுதல் வேண்டிப் போந்த மயில் இயல் உமையாள் செயிரறு காஞ்சி வந்தாள்'' என்று விநாயக புராணம் கூறுகிறது. ஆதியில் அம்மை, ஆற்று மணலால் நிறுவி வழிபட்ட பிருதிவி (மணல்) லிங்கம் உள்ள தலம் இதுவாகும். பஞ்சபூதத்தலங்களுள் முதன்மையான தலம் காஞ்சிபுரம். அர்ச்சுனன் தீர்த்த யாத்திரையாக வட நாட்டிலிருந்து தென்னாடு வந்த போது காஞ்சிபுரம் வந்தான் என்பதை, ''கச்சைப்பொரு முலையாளுறை கச்சிப்பதி கண்டான்'' என்று வில்லிபாரதம் கூறுகிறது. எனவே புராண, இதிகாச, வரலாற்றுக் காலங்கட்கு முற்பட்ட பழமை உடையது காஞ்சி நகரமும், திருவேகம்பர் கோயிலும் என்பது இதனால் புலனாகும்.

தொண்டை நாட்டுத் தேவாரப் பாடல் பெற்ற தலங்கள் 32-ல் ஒன்றான காஞ்சிபுரம் பல்லவர்களுக்கும் தலைநகரமாக விளங்கியது. அதனால் காஞ்சியில் பலகோயில்கள் பல்லவர் காலக் கலையமைப்பினைக் கொண்டிருக்கும். திருவேகம்பர் கோயிலும் பல்லவர்கலையுடன் பிற மன்னர்களின் கைவண்ணத்தையும் கொண்டது. இக்கோயிலில் உள்ள கல்வெட்டுக்களில் இருந்து குலோத்துங்க சோழன் முதலிய சோழ மன்னர்கள், முதலாம் மகேந்திரவர்மன், கிருஷ்ண தேவராயர், விஜயகண்ட கோபால தேவர், கம்பண்ண உடையார், அச்சுத உடையார், கணபதிதேவன் முதலியோர் பற்றிய செய்திகள், செய்த திருப்பணிகள், அளித்த நன்கொடைகள் போன்றவைகளை அறிய முடிகிறது. சென்ற நூற்றாண்டில் வள்ளல் பச்சையப்ப முதலியார் அமைத்த அழகிய 16கால் மண்டபத்தையும், அதன் மேற்கில் அழகிய தோற்றத்துடன் நின்ற நிலையில் உள்ள கரிகால் சோழனுடைய கற்சிலையையும் காணலாம்.

இத்திருக்கோயில் சம்பந்தர் முதலிய மூவர் மணிவாசகர் ஆகியவர்களின் பாடல்களையும், பட்டினத்தார் பாடலையும் பெற்றது. சேக்கிழாரின் பெரிய புராணம், சிவஞான சுவாமிகளின் காஞ்சிப்புராணம், மகேந்திரவர்மன் இயற்றிய மத்தவிலாசப் பிரகடனம், இரட்டைப் புலவர் அருளிய ஏகாம்பரநாதர் உலா போன்ற நூல்களும், மணிமேகலை, பெரும்பாணாற்றுப்படை, தண்டியலங்காரம் தக்கயாகப்பரணி, சிதம்பர



மகாத்மியம் போன்றவைகளும் இக்கோயிலைப் பற்றிய செய்திகளைக் கூறுகின்றது.

**கோயிலில் உள்ள சந்நிதிகள்**

திருவேகம்பர் கோயில் மிகப் பெரியது என்பது முன்னரே கூறப்பட்டது. இத்திருக்கோயிலின் உள்ளே கம்பாநதி, சிவகங்கை என இரண்டு தீர்த்தக் குளங்கள் உள்ளன. திருக்கச்சி மயானம், லிங்கபேசம், வாலீசம், விண்டுவீசம், ரிஷிபேசம் என்னும் தனித்தனிக் கோயில்களும் உள்ளே அமைந்துள்ளன.

இராஜகோபுரத்தின் உள்ளே நுழைந்ததும் நேரே உள்ளது சரபேசர் மண்டபம். விழாக்காலங்களில் இறைவன் திருவுலாப்போக இங்கே வந்து வாகனத்தில் அமர்ந்த பிறகே உலா தொடங்கும். இடப்புறம் திரும்பினால் காண்பது கம்பாநதித் தீர்த்தம். அதன் மேற்கில் உள்ளது (தற்போது 618 கால்களையே உடைய) ஆயிரங்கால் மண்டபம். இம்மண்டபத்தை ஒட்டியுள்ள கோபுரம் பல்லவர் கோபுரம் எனப்படுகிறது. இக்கோபுரத்தின் நுழைவாயிலில்தான் தலவிநாயகரான விகடசக்கர விநாயகரும், சுப்பிரமணியரும் உள்ளனர். ''சாற்றரிய ஆயிரக்கால் மண்டபத்தின் சார்வாக, ஏற்றமுடனே இனிதிருந்து'' அருளுவதாக இவரை இரட்டைப்புலவர்கள் பாடியுள்ளனர்.

கோயிலின் உள்ளே நுழைந்தால் முதலில் காண்பது ''திருக்கச்சி மயானம்'' என்னும் தனிக்கோயில். ''மைப்படிந்த கண்ணாளும் தானும் கச்சிமயானத்தான்'' என்று அப்பர் பெருமான் பாடியருளிய தலம். இறைவன் நெருப்பு வடிவாய் வேள்வியில் தோன்றிப் பண்டாசுரனை அழித்தருளிய தலம். இக்கோயிலின் எதிரில் வள்ளல் பச்சையப்பர் கட்டிய 16 கால் திருமண மண்டபம் உள்ளது, கச்சிமயானத்தின் பின்புறம் வாலீசம் என்ற தனிக்கோயில் உள்ளது. கச்சி மயானத்தின் வலப்பால் பலிபீடம் என்ற தனிக்கோயில் உள்ளது. கச்சிமயானத்தின் வலப்பால் பலிபீடம் கொடிமரம் நந்திதேவர் அமைய., அருகில் கங்கையிற் புனிதமாய சிவகங்கைத் தீர்த்தக்குளம் உள்ளது.



கொடிமரத்தின் அருகிலிருந்து நேரே நோக்கினால் ''ஏலவார் குழலாள் உமைநங்கை என்றும் ஏத்தி வழிபடப் பெற்ற காலகாலன், கம்பனெம்மான்'' என்று சுந்தரர் பாடிய திருவேகம்ப நாதர், பிருதிவி லிங்கமாக அருட்காட்சி வழங்கிக் கொண்டிருக்கிறார். பின்புறச் சுவற்றில் புடைப்புச் சிற்பமாக சோமாஸ்கந்த வடிவமாகக் காட்சியளிக்கிறார். பார்க்கப் பரவசமூட்டும் அரிய காட்சி.

கருவறையின் வெளிச் சுற்றில் காஞ்சியில் முக்திபெற்ற மூன்று அடியார்களான ஐயடிகள் காவர்கோன், சாக்கியர், திருக்குறிப்புத் தொண்டர் ஆகியோரின் சிலாரூபங்கள் உள்ளன. உருத்திரர்கள் வழிபட்ட கள்ளகம்பர், பிரமன் வழிபட்ட வெள்ளக்கம்பர், திருமால் வழிபட்ட நல்லகம்பர், என்ற மூன்று சிவலிங்கத்திருமேனிகள் அச்சுற்றில் உள்ளன. இவர்கள் சுந்தரர் வாக்கால் போற்றப்படுபவர்கள். சுற்றுமேடையில் அறுபத்துமூவர் மூலத்திருமேனிகளையும் உற்சவத் திருமேனிகளையும் காணலாம். அடுத்த வெளிச்சுற்றில் வரும்போது மேடையில் அமைந்த சிறுகோயில், பிரளய காலத்திலும் அழிவு வராமல் காத்த பிரளயகால சக்தி காட்சி தருகிறாள். அடுத்த நாயகர்(நாயர்) மண்டபம் என்னும் அலங்கார மண்டபத்தில் உற்சவர் சந்நிதி (கண்ணாடியறைக் காட்சி மனத்தைக் கொள்ளை கொள்வது) அருகில் மாவடி, அடுத்து உற்சவ அம்பாள் ஏலவார்குழலி, மாவடிக் கந்தர் சந்நிதிகள், வாயுமூலையில் இராமர் பூசித்த மிகப் பெரிய சஹஸ்ர(1008) சிவலிங்கம், கன்னிமூலையில், பிற்காலப் பிரதிஷ்டையான ஹேரம்ப (பஞ்சமுக) விநாயகர் சந்நிதிகள் கண்ணையும் கருத்தையும் கவருவனவாக அமைந்து உள்ளன. பிரகாரத்தில் சற்று உள் அமைந்து தனியாக நடராஜர் சந்நிதி, சிவகாமி அம்மாள், மணிவாசகருடன் விளங்கும் ஆடவல்லானின் கம்பீரமான திருவுருவம் காண இனியதாகும். ஆறுமுகர், பைரவர் சந்நிதிகளில் அமைந்துள்ள திருமேனிகள் கலையழகும் கண்கவர் தோற்றமும் உடையன. நவக்கிரக சந்நிதியில் அவரவர்களுக்குரிய வாகனங்களுடன் அமைந்த கோள்கள் உள்ளன.

**மாவடியின் சிறப்பு**

காஞ்சியில் உள்ள பல திருக்கோயில்களில் பல்வேறு தலமரங்கள் உள்ளன. அவற்றுள் திருவேகம்பர் திருக்கோயிலில் உள்ள தலமரம் மாமரமாகும். ஏகம் என்றால் ஒன்று, அம்பரம் என்றால் மாமரம். ஏகாம்பரம் என்றால் ஒப்பற்ற (தனி) மாமரம் என்று பொருள். அம்மாமரத்தின் கீழ் உள்ள இறைவன் ஏகாம்பரநாதன் எனப்படுகிறான். அவனை மாமூலன் எனவும் கூறுவர். வேதமே மாமரமாக நிற்க அதனடியில் வேதமுதல்வனாகிய இறைவன் வீற்றிருக்கிறான். இத்தலத்தின் தெய்வீக அடையாளமாக விளங்கும் இம்மாவடியின் கீழ், ஆனந்தப் பேரொளியே



சிவலிங்கமாகத் தோன்றியது. இம்மாமரம் வேதவடிவமானது, ஆதலின் அதைச் சுற்றி வந்து வழிபடுதலே வழக்கம். இங்கு இறைவன் சோமாஸ்கந்த வடிவில் வீற்றிருக்கின்றார். கையில் சின்முத்திரை உள்ளது. கீழே பதஞ்சலி, வியாக்கரபாதர் உள்ளனர். அதற்குக் கீழே பஞ்சாக்கினி மத்தியில் தவம் செய்யும் நிலையில் உள்ள தபஸ்காமாட்சியையும், பக்கத்தில் இலிங்கேத்பவரும், அடுத்து தழுவக்குழைந்த காட்சியும் உள்ளன. மாமூலரை வணங்கிப் பிறவி மூலத்தை அறுப்பது நமது கடமையாகும்.

**நிலாத்துண்டப் பெருமாள்**

ஏகாம்பரநாதப் பெருமான் பிருதிவி லிங்கமாக அமர்ந்துள்ள மூலமூர்த்திக்கு எதிரே, ஈசான மூலையில் நிலாத்துண்டப் பெருமாள் கம்பீரமாக மேற்கு நோக்கி நின்று காட்சி தருகின்றார். ஆழ்வாராதிகளால் மங்களாசாசனம் செய்யப்பட்ட 108 திவ்ய தேசங்களுள் இதுவும் ஒன்றாகும். திருப்பாற்கடலைக் கடைந்தபோது தோன்றிய ஆலகால விஷத்தால் திருமாலின் திருமேனி எரிச்சலுற, சிவபெருமானின் திருமுடியில் உள்ள பிறைச்சந்திரனின் அமுதகிரணம் திருமாலின் உடம்பில் பட்டு எரிச்சல் நீங்கிக் குளிர்ச்சி பெற்றார். எனவே, இவர் நிலாத்துண்டப்பெருமாள் எனப்படுகிறார். இவரைத் திருமங்கையாழ்வார்,

**''நீரகத்தாய் நெடுவரையின் உச்சிமேலாய்**

**நிலாத்திங்கள் துண்டத்தாய், நிறைந்த கச்சி**

**ஊரகத்தாய்......''**

என்று மங்களாசாசனம் செய்கிறார்

**மூல லிங்கம்**

மூலவர் பிருதிவி லிங்கமானதால், பாணத்திற்கு அபிஷேகங்கள் நடைபெறுவதில்லை அவுடையாருக்கு மட்டுமே அபிஷேகம் நடைபெறும். மூலவருக்கு புனுகுச்சட்டம் முதலிய மணப்பொருள்கள் சாற்றுவதே நடைமுறையாகும். இக்கோயிலில் உள்ள 13ஆம் நூற்றாண்டின் கல்வெட்டு இச்செய்தியை உறுதிப்படுத்துகிறது. அச்சுதப்ப நாயகர், திருமலை கிளியப்பன், மல்லப்பன் ஆகிய மூவரும் வழிபாட்டிற்கு வேண்டிய வாசனைத் திரவியங்கள், கற்பூரம், புனுகுச்சட்டம், பன்னீர், குங்குமப்பூ, சல்லப்பட்டு ஆகியவற்றைத் தானமாக அளித்தார்கள் என்பது அச்செய்தியாகும். இந்த மூலலிங்கத்தைச் சூரியன் வழிபடுவது இன்றும் நடைபெற்றுவரும் நிகழ்ச்சியாகும். ஆண்டுதோறும் தைமாதத்தில் ரதசப்தமி தினியன்று, காலையில் சூரியனின் கிரணம் நேரே மூலவரின் மீது விழுந்து வந்து மேலே மறைவது அன்பர்கள் பலரும் கண்டு மகிழும்காட்சியாகும்.

**சிற்பங்களும், ஓவியங்களும்**

இத்திருக்கோயிலில் உள்ள சிற்பங்கள் மிகமிக அரியகலைப் படைப்பாகும். கோயில் மண்டபங்களிலும், தூண்களிலும் அவைகள் அமைந்து காண்போரைப் பரவசப் படுத்துகின்றது. இறைவன் திருக்கண்களை இறைவி மூடுவது இறைவனின் திருமணக்கோலம், இரதிமன்மதன், காமதகனம், திரிபுர தகனம் போன்ற சிற்பங்கள் நம் கண்ணைவிட்டு நீங்காதவை. இத்திருக்கோயிலின் இரண்டாம் பிரகாரம் மேடைமீது உயர்ந்த தூண்களைக் கொண்டு எழிலார்ந்த போதிகைகளுடனும் கொடுங்கைகளுடனும் அமைந்துள்ள கலைப் படைப்பாகும். மண்டபத்தின் கூரைகளிலும், விதானங்களிலும் விஜயநகரமன்னர் கிருஷ்ண தேவராயர் காலத்து ஓவியங்கள் சிதைந்து காணப்படுகின்றன.

**திருப்பணிகள்**

இத்திருக்கோயிலின் திருப்பணிகளை பல்லவ, சோழ, விஜயநகர மன்னர்கள் செய்துள்ளனர். கி.பி.1799-ல் செங்கற்பட்டு மாவட்ட ஆட்சித் தலைவராக (collector) இருந்த MR. HODGSON என்பவர், இத்திருக்கோயிலின் கிழக்குப் பக்கம் உள்ள மதில்சுவற்றில் சுமார் 100அடி நீளம் செப்பனிடப்பட்டுக் கட்ட உதவியுள்ளார். அதனை உறுதிப்படுத்த அவர் பெயர் பொறித்த கல்வெட்டு அந்த மதிற்சுவற்றில் பதிக்கப்பட்டுள்ளது. (இவர் பெயராலேயே ஆடிசன் பேட்டை என்னும் பகுதி வழங்கப்படுவதாகக் கூறுவர்). அதன் பின்னர் பல கொடை வள்ளல்களும், நாட்டுக்கோட்டை நகரத்தார்களும், திருப்பணிகள் செய்து குடமுழுக்கு செய்துள்ளனர். தற்போது திருப்பணிக்குழு அமைக்கப்பட்டு, கோபுரம், கொடிமரம், மண்டபங்கள், சந்நிதிகள் என விரிவான முறையில் திருப்பணிகள் நடைபெற்று வருகின்றன. விரைவில் குடமுழுக்கும் நடைபெற உள்ளது.

**காஞ்சியே கைலாயம்**

கயிலையில் உள்ள பெருமானே காஞ்சியில் கோயில் கொண்டு அருள் புரிகிறார் என்பதை அப்பர் பெருமான் ''கச்சிப் பலதளியும் ஏகம்பத்தும், கயிலாய நாதனையே காணலாமே'' என்றும், ''மதிற்கச்சி மன்னுகின்ற கம்பனை எம்கயிலாய மலையான் தன்னை'' எனவும் கூறுகின்றனர். கயிலையில் இருந்து வந்து இறைவனைப் பூசித்த இறைவி, இறைவனிடம் இருநாழி நெல்பெற்று எண்ணான்கு (32) அறங்களைச் செய்து அறப்பெருஞ் செல்வியாக விளங்குகின்ற பதி காஞ்சிபுரமாகும். இறைவி செய்த பூசையின்போது, கம்பையாறு பெருக்கெடுத்தோட அதனைக் கண்டு அஞ்சிய இறைவி, இறைவனை அணைக்க, இறைவன் குழைந்து காட்டி, இறைவியின் வளைத்தழும்பும் முலைத் தழும்பும் அணிந்து தழுவக்குழைந்த நாதராக உள்ள பதி இது.

''எல்லையில் தொல் புழாள் உமைநங்கை என்றும் ஏத்தி வழிபடப் பெற்ற நல்லகம்பனை'' தேசமெல்லாம் புகழ்ந்தாடும் கச்சித் திருவேகம்பன் கோயிலில் சென்று கண்ணாரக் கண்டும், இங்கு எழுத்தில் வடிக்க முடியாமல் விடுபட்ட செய்திகளை நூல்களில் கற்றும் கேட்டும், பிறவிப் பயனை அடைவோமாக. பண்ணில் ஓசை, பழத்தில் இன்சுவை, வண்ணமில் வடிவோய கண்ணில் உள்மணியான கச்சியேகம்பனை திருக்குடமுழுக்குக் கண்டும் நாளும் நினைந்து போற்றி வழிபட்டு வினையின் நீங்கி வாழ்வோமாக.







சென்னை, நுங்கம்பாக்கம் அருள்மிகு அகிலாண்டேசுவரி அம்மை உடனாய அகத்தீசுவரர் திருக்கோயிலில் 10.7.2006 அன்று நடைபெற்ற குடமுழுக்கு விழாவில் அறநிலையத்துறை ஆணையர் திரு.த.பிச்சாண்டி, இ.ஆ.ப., அவர்கள் மற்றும் பக்த பெருமக்கள்.


சிறப்பாசிரியர் மற்றும் வெளியிடுவோர் : திருமிகு **த. பிச்சாண்டி,** இ.ஆ.ப., ஆணையர்.
தமிழ்நாடு அரசு இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை, சென்னை - 600 034. தொலைபேசி : 28334811/12/13

ஆசிரியர் : ம. தேவேந்திரன், பி.எஸ்சி., பி.எல்., உதவி ஆணையர்

அச்சிடுவோர் : குணசுந்தரி மாடர்ன் ஆர்ட் பிரிண்டர்ஸ், சென்னை -21. தொலைபேசி : 25967929



# அருள்மிகு மஹாலக்ஷ்மி திருக்கோயில்

## (அருள்மிகு அஷ்டலக்ஷ்மி கோயில்)

### பெசன்ட் நகர், சென்னை - 90.

தமிழகத்தில் திருமகளாம் மகாலட்சுமிக்கென தனிப்பட்ட முறையில் அமைந்த திருக்கோயில். விமான நிழல் கீழே விழாத அஷ்டாங்க விமானத்தில் ஓம்கார வடிவத்தில் வங்கக் கடலோரம் திருமால் திருமகளை கைப்பிடித்த திருமணக் கோலத்தில் கருவறையில் காட்சி தருவதோடு பல்வேறு இலக்குமியின் சக்தி ரூபங்களான ஆதிலட்சுமி, தான்யலட்சுமி, தைரியலட்சுமி, சந்தான லட்சுமி, விஜயலட்சுமி, வித்யாலட்சுமி, கஜலட்சுமி, தனலட்சுமி என்ற எட்டு வகை உருவங்களும் அஷ்டாங்க விமானத்தில் கூடி காட்சி தரும் திருக்கோயிலாகும். அனைவரும் வருகை தந்து அஷ் டலட்சுமிகளின் அருள்பெற வேண்டுகிறோம்.

## திருக்கோயில் கட்டண விபரங்கள்

| | | |
|---|---|---|
| 1. | நித்திய பூஜை கட்டளை | ரூ. 10,001.00 |
| 2. | திருக்கல்யாண உற்சவம் | ரூ. 3,001.00 |
| 3. | நெய்தீபக் கட்டளை | ரூ. 2,001.00 |
| 4. | மலர் அலங்காரம் | ரூ. 1,501.00 |
| 5. | மூலவர் திருமஞ்சனம் | ரூ. 1,001.00 |
| 6. | வருட நட்சத்திர அர்ச்சனை | ரூ. 600.00 |
| 7. | உத்சவர் தனி சன்னதி திருமஞ்சனம் | ரூ.501.00 |
| 8. | ஆஞ்சநேயர் வடைமாலை | ரூ. 351.00 |
| 9. | அஷ்டலட்சுமி அர்ச்சனை | ரூ. 101.00 |
| 10. | ஒரு லட்சுமிக்கு அர்ச்சனை | ரூ. 21.00 |
| 11. | தாயார்(மகாலட்சுமி) சகஸ்ரநாம அர்ச்சனை | ரூ. 21.00 |
| 12. | அஷ்டோத்திர அர்ச்சனைச் சீட்டு | ரூ. 2.00 |
| 13. | ஒரு நாள் அன்னதானக் கட்டணம் | ரூ. 1200.00 |
| 14. | அன்னதானக் கட்டளை | ரூ.15,000.00 |

**இரா. இரகுநாதன்**
நிர்வாக அதிகாரி

**க. பழனியப்பன். பி.எஸ்.சி., பி.எல்.,**
உதவி ஆணையாளர்/தக்கார்

ஸ்ரீ அஷ்டலக்ஷ்மி

பதிவு எண் : TN / PMG / (CCR) / 707 / 06-08 / WPP No. 451/06-08



இணைக்கப்பட்ட
மற்றும்
இணைக்கப்படாத
திருக்கோயில்கள்
சுசீந்திரம்



## அருள்மிகு நாகராஜா திருக்கோயில், நாகர்கோயில்

# மகாகும்பாபிஷேக அழைப்பிதழ்

பேரன்புடையீர்,

பாரத திருநாட்டில் நாகர் வழிபாட்டிற்காக கோயில்கள் பல இருந்தாலும் நாகத்தின் பெயரையே தனதாகக் கொண்ட நாகர்கோவில் நகரில் அமைந்துள்ள சிறப்பும் பழைமையும் வாய்ந்த அருள்மிகு நாகராஜா திருக்கோயிலில்

நிகழும் மங்களகரமான விய ஆண்டு ஆவணி மாதம் 12ம் தேதி திங்கள்கிழமை (28.8.2006) சித்திரை நட்சத்திரமும் சதுர்த்தி திதியும் கூடிய சுபமுகூர்த்தத்தில் சித்தயோகத்தில் காலை 9.01 மணிக்கு மேல் 10.31 மணிக்குள் துலா லக்னத்தில் குரு உதயத்தில் விமானங்களுக்கு மகா கும்பாபிஷேகம் நடைபெறவுள்ளது.

பக்தகோடிகள் அனைவரும் மகா கும்பாபிஷேகத்திற்கு வருகை தந்து இறையருள் பெற்றுச் செல்லுமாறு வேண்டுகிறோம்.

இங்ஙனம்

**திரு. நயினார். குமார்**
திருப்பணிக்குழு தலைவர்
மற்றும் உறுப்பினர்கள்

**திரு. மா. புகழேந்திரன், பி.ஏ.,பி.எல்.,**
துணை ஆணையர்/செயல் அலுவலர்

